# முகவுரை

எனது ஜப்பான் செலவிற்குப் பின்பு, நண்பர் பலர் வற்புறுத்தலின்மீது யான் எழுதி வெளியிட்ட "நான் கண்ட ஜப்பான்", "ஜப்பானில் சில நாட்கள்" என்னும் நூல்கள் தமிழகத்து நன் மக்களால் நன்கு வரவேற்கப்பட்டன. சென்னை, அண்ணுமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பாடக் குழு வினர் "நான் கண்ட ஜப்பான்" என்னும் பெரு நூலைக் கல்லூரி இடைநிலை வகுப்புக்குப் பாட நூலாக வைத்து என்னை ஊக்கினர். பலநூறு உயர் நிலைப் பள்ளி அதிகாரிகள் "ஜப்பானில் சில நாட்கள்" என்னும் நூலைப் பாட நூலாக வைத்து ஆதரித்தனர். இவ்விருதிறத்துப் பெரு மக்கட்கும் எனது நன்றி என்றும் உரியது.

சென்ற ஆண்டு யான் இந்தோனேஷியா, ஆஸ்திரேலியா, நியூஜீலந்து, பிலிப்பைன்ஸ் தீவுகள் முதலிய நாடுகளுக்குச் சென்று மீண்டதைக் கண்ட என் நண்பர் பலர், அந்நாடுகளைப் பற்றிய விவரங் களை முன்போலவே நூல்களாக எழுதி வெளியிடல் வேண்டும் என்று பணித்தனர். அவர்தம் பணியை ஏற்று, எனக்கு அவ்வப்போது ஏற்பட்ட ஓய்வு நேரங்களில் இந்நூலினை எழுதத்தொடங்கிப் பல திங்கள் சென்றபின் ஒருவாறு முடித்தேன்.

இந்நூல் முழுவதும் ஆஸ்திரேலியாவைப் பற்றியது. ஆதலால் இது "நான் கண்ட ஆஸ்திரேலியா" என்னும் பெயர் பெற்றது. ஆஸ்திரேலிய அரசாங்கத்தைச் சேர்ந்த பலதுறை அதிகாரிகள், பல்கலைக் கழகத் துணை வேந்தர்கள், வணிகப் பெருமக்கள், சிட்னிப் பல்கலைக்கழகப் பேராசிரியர்கள் முதலிய பெருமக்கள் ஆஸ்திரேலியாவைப் பற்றிக் கூறிய பலதிறச் செய்திகளும், அவர்கள் என்னிடம் தந்த அரசாங்க அறிக்கையிற் கண்ட பல விவரங்களும் இதன்கண் இடம்பெற்றுள்ளன. அப்பெருமக்கள் அனைவர்க்கும் எனது உளமார்ந்த நன்றி உரியது.

முன்னர் என்னை இந்நூல் வெளியீட்டுத் துறையில் ஆதரித்து ஊக்கிய பெருமக்கள் அனைவரும் இப்பொழுதும் ஆதரிப்பர் என்னும் நம்பிக்கையில் இந்நூலை வெளியிடுகின்றேன். தமிழன்னை திருவருள் புரிக.

தியாகராய நகர்,
சென்னை.

சு. இராமசுவாமி நாயுடு

# உள்ளுறை

| | | பக்கம் |
|---|---|---|
| 1. | புதிய கண்டம் | ... 1 |
| 2. | இயற்கை அமைப்பு | ... 14 |
| 3. | உள்நாட்டு ஆராய்ச்சியும் குடியேற்றமும் | ... 19 |
| 4. | அரசியல் | ... 34 |
| 5. | கல்வி | ... 43 |
| 6. | போக்குவரவு | ... 50 |
| 7. | தொழிலும் வாணிகமும்–I | ... 56 |
| 8. | தொழிலும் வாணிகமும்–II | ... 67 |
| 9. | தொழிலாளர் இயக்கம் | ... 84 |
| 10. | நாட்டுப் பாதுகாப்பு | ... 92 |
| .11. | பழங்குடிகள் | ... 97 |
| 12. | பலவகை உயிர்கள் | ... 102 |
| 13. | சிறப்பு நகரங்கள் | ... 107 |
| 14. | இருபதாண்டுகளில் ஆஸ்திரேலியா | ... 115 |
| 15. | தாயக உறவும் கலை வளர்ச்சியும் | ... 124 |
| 16. | சில விவரங்கள் | ... 131 |

# 1. புதிய கண்டம்

## வான் வழிச் செலவு

தொழில், வாணிகம், இயந்திரப் பெருக்கம் முதலிய பல துறைகளிலும் ஆசிய நாடுகளுள் முன்னேறி இருப்பது ஜப்பானாகும். அங்குள்ள மக்கள் உழைப்பின் உறைவிடமாக விளங்கு கின்றனர். நான் அத்திருநாட்டை 1952-இல் பார்வையிட்டு மகிழ்ந்தேன் ; அடுத்த ஆண்டு இங்கி லாந்து, பிரான்ஸ், ஜெர்மனி, இத்தாலி, எகிப்து முதலிய மேற்கு நாடுகளைக் கண்டு மீண்டேன் ; சென்ற (1954-ஆம்) ஆண்டின் தொடக்கத்தில் கீழை நாடுகளைப் பார்க்க விழைந்தேன். நான் வான் வழிச் சென்று முதலில் இலங்கையைக் கண்டு மகிழ்ந் தேன் ; பின்பு பிரிட்டனின் சிறந்த கடற்படைத் தளமாக உள்ள சிங்கப்பூரை அடைந்தேன் ; அங்கிருந்து சீனத்திலுள்ள ஹாங்காங்கு நகரத் திற்குச் சென்றேன் ; பின்னர் ஜப்பான் நாட்டில் ஒரு திங்களுக்கு மேல் தங்கினேன் ; அவ்வளமிகு நாட்டிலிருந்து பிலிப்பைன்ஸ் தீவுகளுக்குச் சென் றேன். சில நாட்களுக்குப் பின்னர், 'பழைய உல கத்தின் புதிய கண்டம்' எனப்படும் ஆஸ்திரேலியா வைக் காண ஆவல் கொண்டேன் ; அதனால் வான வூர்தியில் அமர்ந்து, மேற்கு ஆஸ்திரேலியாவின் வடகோடியிலுள்ள டார்வின் (Darwin) நகரத்திற் குச் சென்றேன்.

## ஆஸ்திரேலியாவில்

நான் டார்வின் நகரத்தைச் சுற்றிப் பார்வை யிட்ட பின்னர் ஆஸ்திரேலியாவின் கிழக்குக் கரை யில் உள்ளதும் சிறந்த துறைமுக நகரமாக விளங்கு வதுமாகிய சிட்னி (Sydney) யை அடைந்தேன். அது புதிய தென்வேல்ஸ் மாகாணத்தின் தலைநகர மாகும். அங்கிருந்த அதிகாரிகளுடனும், வணிகப் பெருமக்களுடனும், பல்கலைக்கழகப் பேராசிரியர் களுடனும் சில நாட்களைக் கழித்தேன். சிட்னி நகரம் ஆஸ்திரேலியா என்னும் மனிதனது உயிர் என்று கூறலாம். எல்லா நலங்களும் பெற்றுள்ள அப்பெரு நகரைப் பார்வையிட்ட பின்னர், யான் ஆஸ்திரேலிய நடு அரசாங்கத் தலைநகரான கான்பரா (Canberra) வைக் கண்டு களித்தேன்; பின்பு விக்டோரியா மாகாணத்தின் தலைநகரான மெல்பர்ன் (Melbourne) நகரத்தை அடைந்தேன்.

மெல்பர்ன் என்னும் பெரு நகரம் இயற்கை அழகையும் செயற்கை அழகையும் தன்பாற் கொண்டு விளங்குவது. அங்குள்ள பலதுறைப் பெரு மக்களோடு சில நாட்களைக் கழித்த பின்னர், யான் குவீன்ஸ்லாந்து மாகாணத்தின் தலைநகரான பிரிஸ்பேன் (Brisbane) நகரத்திற்குச் சென்றேன். அதுவும் முன்னவை போலவே கண்ணுக்கினிய காட்சியை நல்கும் கவினுறு நகரமாகும். அங்குள்ள நண்பர்களுடன் இரண்டு நாட்கள் அளவளாவிய பின்னர், யான் தென் ஆஸ்திரேலிய மாகாணத்தின் தலைநகரமான அடிலெய்ட் (Adelaide) என்னும் பெரு நகரத்திற்குச் சென்றேன். இயற்கையும் செயற்கையும் இணைந்து நின்று அந்நகரத்தை அழகு செய்கின்றன. வானளாவிய கட்டிடங்கள்

என்னை வரவேற்பன போலக் காட்சியளித்தன. அத் திருநகரின் அமைப்பையும், அழகையும் செல்வச் சிறப்பையும் கண்டு களித்த யான், அங்கிருந்து டாஸ்மேனியா (Tasmania) மாகாணத்தை அடைந் தேன். டாஸ்மேனியா ஆஸ்திரேலியாவிற்குத் தெற்கே உள்ள ஒரு தீவாகும். ஆயினும் அஃது ஆஸ்தி ரேலிய அரசாங்கத்திற்கு உட்பட்ட ஒரு மாகாண மாக இருக்கின்றது. நான் மூன்று நாட்கள் அங்குத் தங்கினேன்; அங்குள்ள தொழிற்சாலைகளைப் பார் வையிட்டேன்; பின்பு மேற்கு ஆஸ்திரேலிய மாகா ணத்தின் தலைநகரான பெர்த் (Perth) என்னும் பேரூரை அடைந்தேன்; அங்குள்ள அரசாங்க உயர் அலுவலர் என்னை மகிழ்ச்சியோடு வரவேற்றனர்; நகரத்தின் பல பகுதிகளையும் எனக்குக் காட்டினர்.

## கண்டனவும் கேட்டனவும்

நான் இப்புதிய கண்டத்தில் இருபத்தைந்து நாட்கள் தங்கினேன்; ஒவ்வொரு மாகாணத் தலை நகரையும் நன்கு பார்வையிட்டேன்; ஒவ்வொரு துறை பற்றிய செய்திகளையும் அவ்வத் துறை உயர் அலுவலர் கூறக் கேட்டறிந்தேன்; பல தொழிற் சாலைகளைப் பார்வையிட்டேன். நான் கண்ட ஒவ் வொரு நகரத்திலும் இருந்த நல்லறிஞர் தமது நாட்டைப் பற்றிக் கூறிய செய்திகள் பலவாகும். அவை அனைத்தும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

## வரலாறு

ஆஸ்திரேலியாவை முதன் முதலில் கண்டு பிடித்தவர் இன்னவர் என்பதை அறுதியிட்டுக்கூற இயலாது. சீனர், பிரெஞ்சுக்காரர், டச்சுக்காரர், போர்ச்சுகீசியர், ஆங்கிலேயர் ஆகிய பல நாட்டினர்

கடற் செலவில் விருப்பம் உடையவராய், உலகெங்கும் சுற்றி வந்தனர். இவர்களுள் யார் ஆஸ்திரேலியாவை முதலில் அடைந்தனர் என்பதற்குத் தக்க சான்று கிடைக்கவில்லை. ஆயினும், கி. பி. 13-ஆம் நூற்றுண்டில் சீனர்கள் ஆஸ்திரேலியாவைப் பற்றிய சில செய்திகளை அறிந்து வைத்திருந்தனர் என்பது வரலாற்றின் வாயிலாக அறியப்படுகிறது. மலாய் மக்களும் இத்தீவைப் பற்றித் தெரிந்திருந்தனர் என்று அறிகிறேம். மார்க்கோபோலோ என்பவர் கி. பி. 13-ஆம் நூற்றுண்டில் உலகத்தின் கீழ்க்கோடி எங்கும் சுற்றிப் பார்த்து வந்தார். அவர் தெற்கே ஒரு தனிக் கண்டம் இருப்பதாகக் குறிப்பிட்டு எழுதியுள்ளார்.

## பல நாட்டவர் முயற்சி

கி. பி. 1503-இல் பினாட் பால்மியர் (Binot Paulmyer) என்னும் பிரெஞ்சுக் கப்பலோட்டி வழி தப்பி ஒரு தீவை அடைந்தார்; அது தென் புறத்தில் உள்ள பழமையான ஒரு தீவு எனக் கருதினர். அவர் இறந்த பிறகு கி. பி. 1531-இல் சில பிரெஞ்சு ஆசிரியர்கள், பினாட் கண்டது ஒரு புதுக் கண்டமே என்று ஆராய்ந்து முடிவு கட்டினர். போர்ச்சுகீசியரும் தாங்களே ஆஸ்திரேலியாவை முதலில் கண்டு பிடித்தவர் என்று கூறிப் பெருமை கொள்கின்றனர். ஆயினும், உண்மையை நிலைநாட்டும் சான்றுகள் கிடைக்கவில்லை. கி. பி. 1597-இல் விட்பிளிட் (Wytfliet) என்னும் டச்சு வரலாற்றுப் புலவர் ஆஸ்திரேலியாவை ஓரளவு விளக்கி எழுதியுள்ளார்.

கி. பி. 17-ஆம் நூற்றுண்டில் ஸ்பெயினிலிருந்து ஒரு குழு தென் கண்டத்தைக் கண்டு பிடிக்கக்

கடலில் சென்றது. ஆயினும் இடைவழியில் நோயும், மனக் குறைவும் அக்குழுவினரிடையே பரவின. அக்குழுத் தலைவன் தான் பார்க்க நினைத்த நிலப் பரப்பை ஒரு முறையேனும் காண விழைந்தான். அவன் கண்கள் நீலக்கடலில் வான முகட்டிற்கு அப்பால் ஒரு மண் திடலைக் கண்டன. அதுவே ஆஸ்திரேலியா என்று அவன் தன் மனத்துள் எண்ணிக் கொண்டான்.

ஆஸ்திரேலிய மண்ணில் முதன் முதலில் அடி யெடுத்து வைத்த ஐரோப்பியர் டச்சுக்காரரே. கி. பி. 1606-இல் ஜாவாவினின்று புறப்பட்ட கப்பல் களில் டச்சுக் கப்பலோட்டிகள் பிரயாணம் செய்த னர். கடற் செலவின் முடிவில், அவர்கள் ஆஸ்தி ரேலியத் தீவை அடைந்தனர். அங்குள்ள பழங் குடிகள் டச்சுக்காரரோடு போரிட முனைந்தனர். 1642-இல் ஜான்ஸூன் டாஸ்மன் (Janszoon Tasman) என்னும் டச்சுக்காரர் ஒரு புதிய இடத் தின் மேற்குக் கரையைக் கண்டார்; பின்பு கிழக்குக் கரையையும் ஓரளவு ஆராய்ந்தார். ஆயின், அவர் கண்டது இப்போது சொல்லப்படும் ஆஸ்திரேலியா அன்று. அதன் தெற்கே அவர் பெயரோடுள்ள டாஸ்மேனியா (Tasmania) என்னும் தீவேயாகும். பின்னர் இரண்டாம் முறையாக ஏற்பட்ட டச்சுக் காரர் பிரயாணத்தில் ஆஸ்திரேலியாத் தீவில் குடி யேற்றுதல் நடைபெற்றது. அவர்கள் ஆஸ்திரேலிய மேற்குக் கடற்கரையை ஓரளவு ஆராய்ந்தனர்.

ஆஸ்திரேலியாவைக் கண்ட ஆங்கிலேயர்களுள் முதல்வர் வில்லியம் டாம்பியர் (William Dampier) என்பவர். அவர் தமது பிரயாணத்திற்குப் பிறகு ஒரு நூல் எழுதி வெளியிட்டார். பின்னர் அவர் ஆஸ்திரேலியாவை நன்கு ஆராயும்படி

அனுப்பப்பட்டார். அவர் "ஆஸ்திரேலியா நீரற்ற வறண்ட நிலப்பரப்பு; கங்காருவைத் தவிர வேறு விலங்குகள் அற்றது," என்று தமது குறிப்பில் வரைந்தனர். கி. பி. 1696-இல் கிழக்கிந்தியக் கம்பெனியார் ஒரு டச்சுக் கப்பலைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் ஈடுபட்டு, ஆஸ்திரேலியாவின் சில பகுதிகளைச் சுற்றிப் பார்த்தனர். ஜேம்ஸ்குக் (James Cook) என்ற பெரியாரின் கடற் செலவே மிக்க சிறப்புக்குரியது. அவர் பன்முறை கப்பற் செலவை மேற்கொண்டு, ஆஸ்திரேலியாவைச் சுற்றிப் பார்த்தார்.

## ஜேம்ஸ் குக்கின் கடற்செலவுகள்

கி. பி. 1769-இல் இங்கிலாந்து நாட்டில் மூன்றும் ஜார்ஜ் மன்னர் ஆட்சி புரிந்தார். அவர் காலத்தில் வான ஆராய்ச்சியிற் பல புதிய உண்மைகளைக் காணவேண்டுமென்ற வேட்கை பல அறிஞர்களிடையே எழுந்தது. வானத்தில் 'வீனஸ்' என்னும் வெள்ளிக்கோள் கடந்து செல்வதைக் கண்டு பிடிப்பதில் ஆங்கில நாட்டு இராயல் கழகம் (Royal Society) பெருமுயற்சி கொண்டது. கி. பி. 1769-ஆம் ஆண்டு ஜூன் திங்களில் வெள்ளிக் கோள் (வீனஸ்) கதிரவன் மண்டலத்தைக் கடந்து செல்லுமெனவும், அது மீண்டும் ஒரு நூற்றாண்டிற்குப் பின்னரே தோன்றும் எனவும் வான நூலார் இராயல் கழகத்தாரிடம் கூறினர். வீனஸின் வியப்புறு காட்சியைக் காணல் வேண்டுமென இராயல் கழகத்தார் மூன்றும் ஜார்ஜ் மன்னரிடம் தெரிவித்தனர். அதன் பின்னர் ஆங்கிலேய மன்னரின் ஆணையின்படி கப்பல் தலைவர் ஜேம்ஸ் குக் என்பார் அப் பணியை ஏற்றார். அவர் வானநூலறிவும், கணித

நூற்பயிற்சியும், கடல்நூல் - நிலநூல் ஆராய்ச்சியும் பெற்றிருந்தார். வீனஸ் கோளைத் தென் பசிபிக் தீவுகளில் காண்டல் கூடுமென்பதை ஆராய்ந்து, ஜேம்ஸ் குக் 'எண்டவர்' என்னும் பாய்மரக் கப்பலில் எண்பத்து நான்கு துணைவருடனும் பன்னிரண்டு பீரங்கிகளுடனும் புறப்பட்டார். அவருடன் இயற்கை நூல் அறிஞரும், ஓவியக்காரரும், மருத்துவரும், தச்சரும் மற்றும் தொழிலாளர் சிலரும் சென்றனர். அவர் மேற்கொண்ட மூன்று கடற் செலவுகளுள் முதற் கடற் செலவே ஆஸ்திரேலிய வரலாற்றில் குறிக்கத்தக்கது.

## டாஹிட்டி தீவு

'எண்டவர்' கப்பல் பசிபிக் பெருங்கடலிலுள்ள எழில் நிறைந்த டாஹிட்டித் தீவை அடைந்தது. அஃது ஆஸ்திரேலியாவுக்கு வடகிழக்கே நெடுந் தொலைவில் உள்ளது. அத்தீவு பல சிறு தீவுகளுக்குத் தலைமையாட்சி நிலையமாக விளங்கியது. அங்குப் பவளத்திட்டுக்களும், பச்சை வயல்களும், பழ மரங்களும் எழிற்காட்சி வழங்கின. அத்தீவு மக்கள் தழைகள் அணிந்த உடலை உடையவராயும் தேங்காய், வாழைப் பழம், ஆப்பிள் பழம், அத்திப் பழம், பன்றியிறைச்சி முதலிய பொருள்களைப் பண்ட மாற்று வாணிக முறையில் விற்றுப் பிழைப்பவராயும் காணப்பட்டனர். ஜேம்ஸ் குக் அவர்களிடம் நட்புக்கொண்டு, டூட்டாஹா, டுபராய் ஆகிய இரு குடித் தலைவர்களது உதவியால் ஒரு பெரிய வீட்டில் தங்குவதற்கு ஏற்பாடு செய்துகொண்டார்; அத் தீவிலிருந்தே வீனஸ் தோன்றும் வான நிகழ்ச்சியைக் காண விரும்பினர். அவர் விரும்பியவாறே ஆராய்ச்சிக்கூடம் போன்ற ஓர் அரணைச் சுதேச

மக்கள் கட்டிக்கொடுத்து, அவருக்குப் பேருதவி புரிந்தனர். அரண்மீது ஆறு பீரங்கிகள் அமைக்கப்பட்டன; வான ஆராய்ச்சிக் கருவிகள் பொருத்தப்பட்டன. சுதேச மக்களிற் சிலர் அக்கருவிகளைக் கண்டு அஞ்சினர்; அவற்றைத் திருடிக்கொண்டும் ஓடினர். வேறு சிலர் பீரங்கிகளைக் கண்டு அஞ்சி, மீன் பிடிக்கச் சென்றிலர். ஜேம்ஸ் குக் அவர்களிடம் அன்பு பூண்டு, தாம் கொண்டு வந்த இரும்பை உருக்கிக் கருவிகளாக்கிச் சுதேசிகளுக்கு அளித்தார்; ஆங்கில நாட்டுப் பழவகைகளைக் கொடுத்து அவர்களை மகிழ்வித்தார்; சில பழங்களின் விதைகளைக் கொடுத்துப் பயிரிடுமாறு செய்தார்.

## வெள்ளிக் கோளின் காட்சி

ஜூன் திங்கள் இரண்டாம் நாள் ஜேம்ஸ் குக்கும், அவர் தோழர்களும் இரவும் பகலும் தூங்காமல் வானத்தையே உற்று நோக்கியிருந்தனர். மூன்றும் நாள் சனிக்கிழமை பொழுது புலர்ந்தது. வைகறையில் கதிரொளி தெளிவாகப் புலப்பட்டது. வான வெளியில் முகிற் கூட்டம் இல்லாமையால் கதிரவன் தோன்றிய காட்சியில் உவகை பெருக்கெடுத்தது. ஜேம்ஸ் குக் இமை கொட்டாமல் வானவெளியையே பார்த்த வண்ணமிருந்தார். ஏறத்தாழ ஒன்பது மணிக்கு வீனஸ் ஒரு கரும்புள்ளி போலத் தோன்றியது. அது கதிர் மண்டலத்துள் இருந்து சிறிது சிறிதாக விலகியது. ஜேம்ஸ் குக் வீனஸ் தோன்றி விலகிய கணக்கை ஆறு மணி ஏழு மணித் துளி (ஏழு நிமிடம்) ஆறு நொடி என்று குறிப்பிட்டார்.

அதன் பின்னர் ஒரு திங்கள் டாஹிட்டி தீவில் தங்கியிருந்து, ஜேம்ஸ் குக் ஐம்பெருந் தீவுக் கூட்

டத்தைச் சுற்றிப் பார்த்தார். 'பெருங்கூட்டத் தீவுகள்' என்று அவ்வைந்து தீவுகளுக்கும் அவரே பெயரிட்டார்.

## நியூஜீலந்து தீவுகள்

பின்பு அவர் அத்தீவுக்கூட்டத்தினின்று நீங்கி, தென் திசை நோக்கிப் புறப்பட்டார். ஜேம்ஸ் குக்கும் அவர் குழுவினரும் நியூஜீலந்து தீவின் கிழக்குக் கரையைச் சேர்ந்தனர், நியூஜீலந்து கடற்கரை, பவளத் திட்டுக்கள் அமைந்தது. 'எண்டவர்' கப்பல் பவளத்திட்டில் மோதியது. கப்பலுக்குள் நீர் புகுவதைக் கண்ட குக், அதனைப் பழுது பார்த்தார்; தாம் சென்று பார்த்த எல்லாத் தீவுகளையும் ஆங்கில ஆட்சிக்கு உட்படுத்தினர். ஒரு தீவில் ஓரிடத்தில் சுதேசிகள், கப்பற் குழுவினரைத் தூக்கிப்போக முயன்றனர். ஜேம்ஸ் குக் அதற்குக் 'கடத்திச் செல்பவர் முனை' என்று பெயரிட்டார். பின்னர் நியூஜீலந்தின் வடகோடியை அடைந்து, அதனை 'வடக்கு முனை' என்று அழைத்தார். அங்குள்ள மக்களின் வாழ்க்கை முறையை ஆராய்ந்ததுக், ஒரு வியப்புறு காட்சியைக் கண்டார். மக்களை உண்ணும் இனத்தவராக அத்தீவு மக்கள் வாழ்ந்தனர். தீவுப் பகுதிகளில் மனித எலும்புகளும், மண்டை ஓடுகளும் பல இடங்களில் கிடந்தன. பெண்கள் தங்கள் கணவரைப் பகைவர் கொன்று தின்றனர் என்றறிந்து, துயர் தாங்காமல், தம் கை கால்களில் தாமே வாள் கொண்டு வெட்டிப் புண்களை உண்டாக்கிக் கொண்டனர். நியூஜீலந்தின் வடபால் வாழ்ந்த மக்கள், போரில் தோல்வியுற்ற பகைவர் உடல்களையே உணவாக உட்கொண்டதை ஜேம்ஸ் குக் நேரிற் கண்டார். மேலும் ஒரு நாள்

சிலர் மண்டை ஓடுகளை எடுத்துக்கொண்டு வந்து விலைபேசி விற்பதையும் அவர் கண்டு வியந்தார்.

## நியூஜீலந்து மக்கள்

நியூஜீலந்து மக்கள் பழுப்பு நிறமுடையவர்; கருங் கூந்தலும், வெண்பற்களும் பெற்றவர்; மனித இறைச்சியைத் தின்னும் கொடிய வழக்கம் ஒன்றைத் தவிர, வேறு வகையில் நட்புக் கொள்ளவும் பழகவும் ஏற்றவரேயாவர். பறவை, மீன் முதலியவற்றின் கொழுப்பைக் கூந்தலில் தேய்த்து வாரிமுடிப்பது அவர்களது வழக்கம். மரச் சீப்புக்களையும், எலும்புச் சீப்புக்களையும் அவர்கள் பயன் படுத்துகின்றனர். ஆண்கள் கூந்தலை உச்சியில் முடிக்கின்றனர். பெண்கள் அணி செய்து கொள்வதில்லை. நாய்ப் பற்களையும், மனிதப் பற்களையும், விலங்குகளின் நகங்களையும் காதணிகளாக இருபாலாரும் அணிவதுண்டு. அவர்களிடையே, உழவுக் கருவிகள் இருக்கின்றன. அவை கற்கருவிகளாகும். ஊருக்குப் பொதுவான பெரிய வலையொன்றால் மீன் பிடித்துப் பங்கிட்டுத் தின்று வாழும் வழக்கம் அவர்களிடம் காணப்படுகிறது. நியூஜீலந்து மக்கள் தேங்காய் மூடிகளையே இசைக்கருவிகளாக்கி இசையெழுப்பி மகிழ்கின்றனர். இன்னிசையின் போது நடனமாடுவதும் அவர்களது வழக்கமாகும். வீட்டு வாழ்க்கையில் ஆண்கள் வேட்டையாடித் திரிவர்; பெண்கள் நத்தைகளைப் பிடித்து அவற்றின் தசைகளை உணவாகச் சமைப்பர்.

இத்தகைய நியூஜீலந்து மக்களுடன் ஜேம்ஸ்குக் பழகி நட்புக்கொண்டு, அவர்களிடையே சில நாட்கள் வாழ்ந்து, ஆஸ்திரேலியாவின் கிழக்குக் கரையை நோக்கிச் சென்றார். அக்காலத்தில் ஆஸ்தி

ரேலியா 'புது ஹாலந்து' எனப் பெயர் பெற்றிருந்தது.

## காந்தத் தீவு

ஆஸ்திரேலியாவின் கிழக்குக் கரையை அது வரை யாரும் கண்டதில்லை. முதன் முதலில் ஜேம்ஸ் குக்கே அக்கரையை அடைந்து, பல தீவுகளைக் கண்டு, புதுப் புதுப் பெயரிட்டு, அவற்றை ஆங்கில ஆட்சியோடு ஒன்று சேர்த்தார். கிழக்குக் கரையில் ஓரிடத்தில் 'எண்டவர்' கப்பலின் திசையறி கருவி ஓடாமல் நின்றது. ஜேம்ஸ் குக் அதற்குரிய காரணத்தைக் காணக் கப்பலினின்று கீழிறங்கினர். அத்தீவிற்குக் காந்தத்தின் ஆற்றல் அமைந்திருப்பது கண்டு, அதற்குக் 'காந்தத் தீவு' என்று பெயரிட்டார்; அத்தீவிலும், அதைச் சுற்றியுள்ள தீவுகளிலும் மக்கள் ஆடையின்றி வாழ்வதைக் கண்டார்.

## நம்பிக்கைத் தீவு

காந்தத் தீவினின்று நீங்கிய 'எண்டவர்' கப்பலின் பலகைகள் சில, வழியில் உடைந்து நீரில் வீழ்ந்து மிதக்கலாயின. ஜேம்ஸ் குக் அதனைப் பழுது பார்த்தார். பழுது பார்க்கப்பட்ட 'எண்டவர் கப்பல், 'நம்பிக்கைத் தீவுகளை' அடைந்தது. அத்தீவுகள் வளமற்றவை. அவர் அங்கு முதன் முதலாகக் கங்காரு என்னும் விலங்கினைக் கண்டார்; கங்காருவைப் பிடித்துவருமாறு தமது வேட்டை நாயை ஏவினர். ஆனல் வேட்டை நாய் கங்காருவைப் பிடிக்க முடியாமல் திரும்பி வந்தது. பின்னங் கால்களால் விரைந்தோடும் கங்காருவைக் கண்ட ஜேம்ஸ் குக்கின் வியப்பிற்கு எல்லையில்லை. நம்பிக்கைத் தீவு மக்கள் ஆடையின்றியே வாழ்ந்தனர்;

கப்பற் குழுவினர்மீது வெறுப்புக் கொண்டு கூடா ரங்களைத் தீயிலிட்டுக் கொளுத்தினர்.

## கிழக்குக்கரை

பின்பு ஜேம்ஸ் குக் ஆஸ்திரேலியாவின் கிழக்குக் கரையின் வடகோடிக்குச் சென்றார்; அதற்கு 'யார்க் முனை' என்று பெயரிட்டார். ஆஸ்திரேலியாவுடன் நியூகினித் தீவுகள் இணைந்துள்ளனவா என்பதை அறிய அவர் ஆராய்ச்சி நடத்தினார். இறுதியில் ஒரு கடலிணைப்பு இரண்டையும் பிரிப்பதை அவர் கண்டுபிடித்தார்; அதற்கு 'எண்டவர் கடலிணைப்பு' ஏன்று பெயரிட்டார்; சிற்சில தீவுகளை 'வேல்ஸ் இள வரசர் தீவுகள்' என்றும் அழைத்தார். இவ்வாறு குக் ஆஸ்திரேலியக் கிழக்குக் கரையில் இரண்டாயி ரம் மைல் தொலைவு கடற் செலவு மேற்கொண்டு, தாம் கண்ட எல்லா நிலப் பகுதிகளையும் ஆங்கில ஆட்சிக்கு உட்படுத்தி, கிழக்குக் கரை முழுதுக்கும் **'புதிய தென்வேல்ஸ்'** என்னும் பெயரை வழங் கினார்.

## கிழக்குக்கரை மக்கள்

ஆஸ்திரேலியக் கிழக்குக்கரை மக்களைப் பற்றி ஆராய்ச்சி செய்த ஜேம்ஸ் குக் கீழ்வரும் செய்தி களைக் கூறியுள்ளார்: "கிழக்குக்கரை மக்கள் பழுப்பு நிறத்தினர்; சிலர் ஆப்பிரிக்க நீக்ரோவரைப் போலக் கறுத்திருக்கின்றனர். ஆண்கள் தலை முடியை நீளமாக வளர்த்து அணி செய்து மகிழ்கின் றனர். பெண்கள் குட்டையான கூந்தலை அணிக ளின்றி வைத்திருப்பதில் பெருமை அடைகின்றனர். மேலும் பெண்களுக்கு எலும்புத் துண்டுகளும், கிளிஞ்சல்களும் மிகவும் விருப்பமான அணிக

ளாகும். உடல் முழுதும் செந்நிற—வெண்ணிறக் கோடுகளை வரைந்துகொள்வதில் இருபாலாரும் விருப்பமுடையவர். முகம் முழுதும் வண்ணப் புள்ளிகளிட்டுக் கொள்வதும் இவர்களது வழக்கம். குறுகிய நுழைவாயில்களையுடைய குடில்களில் இம் மக்கள் வாழ்கின்றனர் ; மரக் கட்டைகளைத் தேய்த்துத் தீயுண்டாக்குவதையே அறிந்திருக்கின்றனர். கங்காருவின் இறைச்சியையும், வேறு சில பறவைகளின் இறைச்சியையும், பழங்களையும், மீன்களையும் இவர்கள் உணவாக உட்கொள்கின்றனர்.''

இவ்வாறு ஆஸ்திரேலியாவின் கிழக்குக்கரை மக்களுடைய வாழ்க்கை முறையைக் கண்ட ஜேம்ஸ் குக், தமது முதற் கடற் செலவில் பெரு வெற்றி அடைந்தார். வீனஸ் கோளைக் கண்டதும், ஆஸ்திரேலியாவும் நீயூகினியும் ஒன்றுபட இணைந்தவை அல்ல என்பதைக் கண்டறிந்ததும், ஆஸ்திரேலியாவின் கிழக்குக்கரை முழுதும் ஆராய்ந்ததும் அவருடைய வீரச் செயல்களாகும். இங்ஙனம் ஜேம்ஸ் குக்கினுல் கண்டறியப்பட்ட கிழக்குக் கரையில் ஓரிடத்தில் 1788-ஆம் ஆண்டு ஜனவரித் திங்களில் ஆங்கிலேயர் முதன் முதலிற் குடியேறினர். ஆஸ்திரேலிய வரலாறு இக்குடியேற்றத்தினின்றே தொடக்கம் பெறுகிறது.

# 2. இயற்கை அமைப்பு

## நால்வகை நில அமைப்பு

ஆஸ்திரேலியாவின் கிழக்குக் கடற்கரையிலிருந்து உள்நாட்டுப் பகுதிகளுள் சிறிது சிறிதாகச் சென்று நடுப்பகுதியை அடைந்து, முடிவில் மேற்குக் கடற்கரையைச் சேர்ந்தால், நில அமைப்பின் உண்மை புலனுகும். ஆஸ்திரேலியா நால்வகை நில அமைப்புக் கொண்டது என்று ஆராய்ச்சியாளர் கூறுவது முற்றும் உண்மையாகும். கிழக்கு, தென் கிழக்குக் கடற்கரைப் பகுதியின் நிலம் இயற்கையின் செழிப்பும் நீர்வளமும் வாய்ந்தது. இங்கே மக்கள் தொகையும் பெருகியுள்ளது. இதனை **முதல் வகை நிலப்பகுதி** என்று கூறலாம்.

இதனை அடுத்துள்ள உள்நாட்டு நிலப் பகுதியும் நன்னிலமே என்று கூறத்தக்கது. ஆயினும், இங்குப் பெய்யும் மழையளவு போதியதன்று. இதனை **இரண்டாம் வகை நிலப்பகுதி** என்று கூறலாம்.

இரண்டாம் வகை நிலப் பகுதியை அடுத்த உள்நாட்டு நிலம் மேற்கு நோக்கிப் பரந்துள்ளது. இது வெப்பம் மிகுந்த புல்வெளி நிலமாகும்; மேய்ச்சல் தொழிலுக்கு மிகவும் ஏற்றதாகும். இதனை **மூன்றும் வகை நிலப்பகுதி** என்று பெயரிடலாம்.

ஆஸ்திரேலியாவின் நடுவிலுள்ள உள்நாட்டு நிலம் பாலையாகக் காட்சியளிக்கிறது. இங்கு மழை மிகவும் குறைவு. தென்மேற்குத் திசை நோக்கி இந்நடுப்பகுதி பரந்துள்ளது. இதனை **நான்காம் வகை நிலப்பகுதி** என்று கூறலாம்.

இவ்வாறு ஆஸ்திரேலியாவில் நால்வகை நிலப்

# இயற்கை அமைப்பு



பகுதிகள் அமைந்திருக்கின்றன. இப்பகுதிகளைக் காட்டும் ஆஸ்திரேலியாவின் படமொன்று நில அமைப்பை நன்கு விளக்குவதாகும்.

## கிழக்குக்கரை

ஆஸ்திரேலியாவில் பயிர் செய்வதற்கேற்ற மண் பரப்புகள் கிழக்குக் கரையோரம் காணப்படுகின்றன. அங்கு மழைத் துளிகள் வீழ்ந்து, பொருத்தமான தட்ப வெப்பம் பொருந்திய மென்மையான மண், பயிர்த் தொழிலுக்குப் பண்பட்டிருக்கிறது. அந்நிலம் மிகவும் விரிவாக அமைந்திருப்பதால், ஆஸ்திரேலியர் அங்கே தமக்கு வேண்டிய உணவுப் பொருள்களைப் பயிராக்குகின்றனர்.

## நீர்வளம்

நிலநூல் அறிஞர் ஒரு நாட்டு நீர்வளத்தை மூன்று பிரிவுகளாக வகுத்துக் கூறுவர். (1) சில ஆறுகள், மழை நீரைப் பெற்றவுடன் தரையின் மட்டத்தில் பாய்தலின்றி, மண்ணின் அடிப்புறத்தே மறைகின்றன; (2) சில ஆறுகள் நீரோட்டத்தை நிலத்தின் வெளிப்புறத்தே தோற்றுவிக்காமல் உட்புறத்தே கசிவித்து ஓடுகின்றன; (3) வேறு சில ஆறுகள் பெருக்கெடுத்த நீர்வளத்துடன் மலையினின்று கடலை நோக்கிப் பாய்கின்றன. இத்தகைய மூன்று வகை ஆறுகளையும் நாம் ஆஸ்திரேலியாவில் காணலாம்.

ஆஸ்திரேலியாவின் தென் மேற்கிலும் தென் கிழக்கிலும் பற்பல ஏரிகள் நீர் நிறைந்து காணப்படுகின்றன. மேற்கு ஆஸ்திரேலியாவில் இருநூற்றுக்கு மேலான ஏரிகள் உள்ளன என்று கணக்கெடுத்துள்ளனர். ஆஸ்திரேலியாவிற்குத் தெற்கே இருக்கும்

தீவின் பெயர் டாஸ்மேனியா என்பது. அத்தீவி லுள்ள பெரிய ஏரி பன்னிரண்டு மைல் நீளமுள்ளது.

## இயற்கைச் செல்வங்கள்

இங்ஙனம் நீர்வளம் பொருந்திய ஆஸ்திரேலி யாவிற் கிடைக்கும் இயற்கைச் செல்வங்கள் பல வாகும். குறிப்பிடத்தக்க சில மூலப்பொருள்கள் கிடைக்காவிடினும் உலோகப் பொருள்கள் சில அகப் படுகின்றன. அடிலெய்டிலிருந்து வடகிழக்காகவுள்ள பகுதியில் வெள்ளி, ஈயம், தாமிரம், ஆகிய உலோகப் பழம் பாறைகள் உள்ளன. இந்தியாவில் மைசூரி லுள்ள கோலார் பொன் சுரங்கத்தைப்போல ஆஸ்தி ரேலியாவில் கால்கோர்லி என்னும் பகுதியில் பொன்வயல்கள் இருக்கின்றன. மேலும் பெண்டி கோ, பல்லாராட் ஆகிய பகுதிகளில் கிடைக்கும் களிமண்ணில் பொன் கலந்துள்ளது. காலப் போக்கில் இவ்வாறு கிடைக்கும் பொன் பொடிப் பொடியாகி அழிந்துவருகின்றது. மேலும் இப் பொன்துகள் ஆற்று வெள்ளத்துள் அமிழ்ந்து ஆங்காங்கே ஆற்றுப் படுகைகளில் படிந்துவரு கின்றது. ஆஸ்திரேலிய மக்கள் மிக எளிதில் பொன்துகளைச் சலித்துப் பொற்கட்டிகளாகச் செய்துகொள்கின்றனர். பொன்னுடை போர்த்தாற் போன்ற ஆற்றுப் படுகை நிலங்கள் "ஏழையின் வயல்கள்" எனப் பெயர் பெறுகின்றன.

'கரும்பொன்' எனக் கூறப்படும் இரும்பு அடிலெய்டுக்கு வடமேற்குப் பகுதியில் அகப்படு கிறது. சிட்னி என்னுமிடத்திற்கு அண்மையில் செம்பும், டாஸ்மேனியாவில் கிரைனேட்டும் கிடைக் கின்றன. இவைதவிர, சிட்னியை அடுத்தும் மெல்பர்ன் நகரத்தை அடுத்தும் அவற்றின் சுற்றுப்

புறங்களிலும் நிலக்கரி வெட்டியெடுக்கப்படுகின்றது.

## தட்பவெப்பம்

ஆஸ்திரேலியாவிலுள்ள மிகக் குளிர்ந்த இடம் ஐரோப்பாவிலுள்ள ஸ்பெயின், தென் இத்தாலி ஆகியவற்றின் மிக வெப்பமான இடங்களை ஒத்திருக்கிறது. இதனல் ஆஸ்திரேலியா வெப்பமிகுந்த நாடு போலும் என்று எண்ணுதல் பொருந்தாது. இங்குப் பெய்யும் பருவமழை வெப்பத்தைத் தணிவித்துத் தட்பத்தை அளிக்கின்றது. ஆஸ்திரேலியாவில் மழை பெய்வதை நான்கு வகையாக்கிக் கூறலாம். வட பகுதியில் கோடைக்காலத்தில் பரவலான மழை பெய்கின்றது; தென் பகுதியில் மாரிக்காலத்தில் பரவலான மழை கரையோரம் பெய்கின்றது; கிழக்குப் பகுதியில் இடையருத பெருமழை கொட்டுகின்றது; உள்நாட்டுப் பகுதியில் கடற்புயல்கள் தோன்றுங்காலங்களில் ஆங்காங்கே பெருமழையும் பரவலான மழையும் பொழிகின்றன. ஆண்டுக்கு நாற்பது அல்லது ஐம்பது அங்குல மழையே ஆஸ்திரேலியாவில் பெய்யும் பெருமழை என்னலாம். மழைக்காலத்தில் இங்குக் கடற்புயல்கள் வீசத் தொடங்குகின்றன. கீழ்மேலாக வீசுகின்ற கடற்புயல்களின் காரணமாக மழை பெய்கின்றது. எப்போதாவது ஒருமுறை வீசும் தென்மேற்குப் புயற்காற்று ஆஸ்திரேலியாவின் உள்நாட்டுப்பகுதிகளில் மழையைக் கொடுக்கிறது. கடற் புயல்களைப் போலவே சிறிய கடற் கோள்களும் தோன்றுகின்றன. ஜனவரி, பிப்ரவரி, மார்ச்சு ஆகிய மூன்று திங்களில் இக்கடற்கோள்களின் விளைவாக முத்துக் குளிக்கும் தொழிலாளர்கள் உயிரிழக்கின்றனர்.

இங்கு வடக்கே பனிப்பெய்தல் உண்டு. கிழக்கிலும் பெரும்பனி பல ஆண்டுகளுக்கு ஒரு முறை கொட்டு மென்று கூறுகின்றனர். ஆண்டு முழுவதும் எப்போதும் பனிக்கட்டி வீழ்ந்துகொண்டே இருக் கும் இடங்கள் ஆஸ்திரேலியாவில் இல்லை. சிற்சில மலைச்சிகரங்களிலே பனிப் படலங்கள் கோடையின் முடிவிலும் படிகின்றன.

## குளங்கள்

இத்தகைய இயற்கையமைப்புடைய ஆஸ்திரேலி யாவில் செயற்கையாகவும் நீர்வளத்தைப் பெருக்கு வது தேவையாயிற்று. இங்குப் பயிர்த்தொழிலுக் காகக் களிமண்தரையைக் குடைந்து குளங்கள் வெட்டப்பட்டுள்ளன. ஆங்காங்கே காற்றுடிகளும், மின் பொறிகளும் குளங்களினின்று நீரிறைக்கச் சுழல்கின்றன. பல இடங்களில் மணற்கேணிகள் பாதுகாக்கப் பெறுகின்றன. இயற்கையாகவும், செயற்கையாகவும் நீர்வளத்தை எவ்வளவு பெருக் கினும் போதிய நீரின்மையால், ஆஸ்திரேலியாவில் பயிர்த்தொழில் வளர்ச்சியுறவில்லை. ஆயினும், உழவின் செழிப்பை உண்டாக்கும் பெரு முயற்சி அங்கு இன்றும் நடந்துவருகிறது.

# 3. உள்நாட்டு ஆராய்ச்சியும் குடியேற்றமும்

## குடியேற்றம் நிகழக் காரணங்கள்

ஆங்கிலேயர் ஆஸ்திரேலியாவில் குடியேறக் காரணங்கள் யாவை? அரசியல், வரலாறு ஆகிய வற்றின் வாயிலாக இதனை ஆராய்தல் வேண்டும். பண்டைக் காலத்தில் பிரிட்டன் தன் நாட்டுக் கைதி களை அமெரிக்காவில் குடியேற்றி வந்தது. ஆனால் அமெரிக்கா தன்னுரிமை பெற்ற பின்னர்ப் பிரிட்டிஷ் கைதிகளைத் தங்கள் நாட்டில் ஏற்றுக்கொள்ள அமெ ரிக்கர் மறுத்துவிட்டனர். பிரிட்டன் தன்னுட்டுச் சிறைகளிலுள்ள சிறைக் கைதிகளின் எண்ணிக்கை யைக் குறைக்க விரும்பியது; அதன் பொருட்டு ஒரு புதிய குடியேற்ற நாட்டைத் தேடியது.

ஆஸ்திரேலியா கண்டுபிடிக்கப் பட்டவுடன் அப் புதிய கண்டத்தில் பிரிட்டிஷ் கைதிகளைக் குடி யேற்றவேண்டுமென்று பிரிட்டிஷ் அரசாங்கம் முடிவு செய்தது. மேலும் பிரிட்டனில் ‘ஏழை மக்கள் சட்டம்’ உருவாக்கப் பட்டும், ஏழைகளின் துன் பங்கள் பெருகின. நிலக்கிழார்கள் ஏழை மக்களுக் காக மிகுந்த வரி கட்டுவதில் வெறுப்படைந்தனர். அதனுல் நிலக்கிழார்களின் நலத்தைக் காக்கும் பொருட்டு ஏழை மக்களை ஆஸ்திரேலியாவில் குடி யேற்றப் பிரிட்டிஷ் அரசாங்கம் கருதியது. இன்னும் பிரிட்டிஷ் முதலாளிகள், ஆஸ்திரேலியா மேய்ச்சல் நிலமுடைய நாடெனக் கண்டு, அங்குச் சென்று பிரிட்டிஷ் நெசவு ஆலைகளுக்குக் கம்பளமும், பிரிட் டிஷ் தொழிற்சாலைகளுக்கு மூலப் பொருளும்

மிகுதியாகப் பெறலாம் என்று நினைத்தனர். இவ்வாறு சிறைக் கைதிகள், ஏழைகள், முதலாளிகள் ஆகிய மூவகையினரே ஆஸ்திரேலியாவில் முதன் முதலில் வந்திறங்கினர். ஆஸ்திரேலியாவில் குடியேற்றம் நிகழ்வதற்கு அரசியல் வரலாற்றுச் சூழ்நிலை இதுவேயாகும்.

## முதற் குடியேற்றம்

ஜேம்ஸ் குக் ஆஸ்திரேலியாவைப் பற்றிய விவரங்களை வெளியிட்ட பிறகு 1778-இல் ஆஸ்திரேலியாவின் கிழக்குக் கரையிலுள்ள ஜாக்ஸன் என்னும் கடற்கரைஊர் முதலில் அமைக்கப்பட்டது. அங்கு இங்கிலாந்திலிருந்து கைதிகள் அனுப்பப்பட்டனர். இங்ஙனம் கைதிகளை அனுப்புதல் தொடர்ந்து ஐம்பதாண்டுகள் நடைபெற்றது. ஜாக்ஸன் என்பது பின்னர் ஏற்பட்ட புதிய தென் வேல்ஸ் மாகாணத்தில்* அமைக்கப்பெற்ற ஊராகும். இதே சமயத்தில் டாஸ்மேனியாவிலும் கைதிகள் குடியேற்றம் நடைபெற்றது. டாஸ்மேனியா 1825-இல் தனி மாகாணமாயிற்று.

1835-இல் டாஸ்மேனியாவிலிருந்து சில குடிகள் புதிய தென் வேல்ஸ் மாகாணத்திலுள்ள 'பிலிப்' என்னும் துறைமுகவூரை அடைந்து குடியேறினர். இக்குடியேற்றம் பெருகி, 1851-இல் விக்டோரியா மாகாணம் உண்டாக்கப்பட்டது.

1877-இல் சுவான் ஆற்றங்கரையில் ஒரு குடியேற்றம் நிகழ்ந்தது. இதுவும் 'ஜார்ஜ் அரசர் ஒலி' என்னுமிடத்தில் அமைக்கப்பெற்ற படைத்தள

* மாகாணம் அல்லது மாநிலம் - Province.

ஊரும் மேற்கு ஆஸ்திரேலிய மாகாணத்தை நிறுவு தற்கு அடிப்படையாக இருந்தன.

வின்சென்ட் வளைகுடாவை அடுத்த நிலப்பகுதி யில் 1835, 37-இல் மற்றொரு குடியேற்றம் நடை பெற்றது. அப்பகுதி பின்பு தென் ஆஸ்திரேலிய மாகாணமாகப் பிரிக்கப்பட்டது.

1859-இல் புதிய தென் வேல்ஸ் மாகாணத்தி லிருந்து குவீன்ஸ்லாந்து பிரிக்கப்பட்டது.

## சிட்னி நகரம்

தொடக்கத்தில் சிட்னி என்னும் துறைமுக நகரில் கவர்னர்களாயிருந்த அதிகாரிகள் சிட்னியி லிருந்து கண்டத்தின் உட்பகுதியிற் சிறிது தொலை வரை சாலைகள் அமைத்தனர்; ஆறுகளின் குறுக்கே பாலங்களைக் கட்டினர்; ஆஸ்திரேலிய ஆடுகள் கம்பளம் நெய்யத்தக்க மயிர் உடையவை ஆதலால், அவற்றைக் கொண்டு கம்பளத் தொழில் நடத்தலாம் என்பதை அறிந்த அதிகாரிகள், 1803-ஆம் ஆண்டி லேயே அவ்வாடுகளை வளர்க்க உதவி செய்தனர். அந்த ஆடுகளின் மயிரைக் கொண்டு கம்பளங்கள் நெய்து, ஆஸ்திரேலிய மக்கள் பொருட்சிறப் பெய் தினர். நாளடைவில் சிட்னி நகரம், நியூ சௌத் வேல்ஸ் மாகாணத்தின் தலைநகரமும் சிறந்த துறை முக நகரமுமாயிற்று.

## மெல்பர்ன் நகரம்

இது 'யாரா - யாரா' ஆற்றங்கரையில் அமைந் திருப்பது. 1835-இல் இந்நகரிற் சில குடிசைகளே காணப்பட்டன. ஆயின், ஐந்தாண்டுகளுக்குள் ஆறுயிரம் மக்களைக் கொண்ட ஊராக இது வளர்ச்சி பெற்றது. சிட்னியிலிருந்த கவர்னருக்குக் கீழ்ப்

பட்ட அதிகாரி மெல்பர்னிலிருந்து குடியேற்றத்தைக் கவனித்து வந்தார். இவ்வாறே தென் ஆஸ்திரேலிய மாகாணத்தின் தலைநகரமான அடிலெய்ட் என்னும் ஊரிலும் ஒரு கவர்னர் இருந்தார். மேற்கு ஆஸ்திரேலிய மாகாணத்தின் தலைநகரான பெர்த் நகரிலும் கவர்னர் ஒருவர் இருந்து வந்தார். இக் கவர்னர்கள் தத்தம் மாகாணத்தில் சாலைகள் அமைப்பதிலும், குடியேறிய மக்களுக்கு வேண்டிய பிழைப்பு முறைகளைக் காட்டிக் கொடுப்பதிலும் பெரிதும் முனைந்திருந்தனர்.

## முதல் இருபதாண்டுகள்

ஆஸ்திரேலியாவில் பிரிட்டிஷ் குடியேற்றம் நடந்த இருபதாண்டுகளில் பல மாறுபாடுகள் நிகழ்ந்தன ; அவற்றுள் சிலவற்றை இங்குக் காண்போம் : முதன் முதலில் புதிய தென் வேல்ஸ் மாகாணத்தில் கைதிகள் குடியேற்றப்பட்டனர். அக் கைதிகளை அடக்கி ஆளுவதற்குக் கவர்னர் ஒருவர் பிரிட்டிஷ் அரசாங்கத்தால் நியமிக்கப் பெற்றார். கைதிகள் நிலங்களில் உழவு செய்து பாடுபட்டனர். அப்போது கூட்டுப் பண்ணை முறையில் உழவு நடைபெற்று வந்தது. பின்னர்ச் சில ஆண்டுகள் கழித்து, ஆஸ்திரேலியாவில் பிரிட்டனைச் சேர்ந்த பெருவணிகக் கூட்டத்தார் அரசாங்கச் சலுகைகள் பெற்று நிலங்களைத் தனியுடைமையாக்கிக் கொண்டனர். அத்தகைய பெரிய முதலாளிகளுக்குப் பிரிட்டிஷ் அரசாங்கம் கைதிகளைப் பண்ணையாட்களாகக் கொடுத்து உதவியது ; மேலும் சில புதிய உழவுக் கருவிகளையும் அனுப்பியது. அக் கைதிகள் பிரிட்டிஷ் முதலாளிகளுடைய நிலங்களில் பாடுபட்டு உழவு செய்தனர். முதலாளிகளுக்குக் காட்டிய

பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பேராதரவும், பிரிட்டிஷ் கவர்னர்களின் ஆணையும் ஒன்றோடொன்று முரண் படலாயின. அதனால் பல கலகங்களும் ஏற்பட்டன. முடிவில், நிலங்களைத் தனியுடைமை யாக்கிக் கொண்ட முதலாளிகளைக் கவர்னர் யாரும் தடுக்க இயலவில்லை. முதலாளிகள் முதலில் உழவுத்தொழி லைப் பெருக்கிப் பின்னர்க் கம்பளங்களை மிகுதியாக நெய்து பிரிட்டனுக்கு அனுப்பினர்.

காலப்போக்கில், கம்பளத் தொழில் ஆஸ்திரேலி யாவில் வளரத் தொடங்கியது. ஆஸ்திரேலியா, தனது தட்ப வெப்ப நிலைக்கேற்பவும் மேய்ச்சல் நில அமைப்புக்குத் தக்கவாறும் கம்பளத் தொழிலுக்கே சிறந்ததன்றி, உழவுத் தொழிலுக்குச் சிறந்ததன்று என்ற உண்மை புலப்பட்டது. எனவே, அங்குக் குடியேறிய பிரிட்டிஷ் முதலாளிகள் உழவுத் தொழிலை விடுத்துக் கம்பளத் தொழிலில் புகுந்தனர். இதனால் ஆண்டுதோறும் கம்பள ஆடுகளின் எண் ணிக்கை பெருகியது. கம்பளத் தொழிலின் வளர்ச்சி யைக் கண்ட பிரிட்டிஷ் அரசாங்கம், தனது நாட்டி லுள்ள கம்பளத் தொழிற்சாலைகளுக்கு வேண்டிய கம்பளங்களை மேன்மேலும் ஆஸ்திரேலியாவி லிருந்து பெற்றுக்கொள்ள விரும்பியது.

மேய்ச்சல் பண்ணைத் தொழில் வளர்ச்சி யடைந்தபோது, ஆடுகளுக்குப் போதுமான மேய்ச்சல் நிலம் இல்லாமையால், புதிய நிலங்களைக் கண்டுபிடிக்க வேண்டுமென்ற ஆர்வம் எழுந்தது. கப்பலோட்டிகள் சிலர் கடற் செலவை மேற்கொண்டு புதிய நிலம் காணப்படுமா என்று அறியச் சுற்றி வந்தனர். கப்பலோட்டிகளின் முயற்சி கடற்கரை யில்தான் நடந்தது; கடற்கரைக்கப்பால் ஆராய்ச்சி செய்வது அவர்களால் இயலவில்லை. எனவே

ஆஸ்திரேலியாவின் உள்நாட்டில் புதிய இடங்களைக் காண்பதற்குப் பல அறிவியலாரும் தொழிலாளரும் ஆராய்ச்சியைத் தொடங்கினர்.

## உள்நாட்டு ஆராய்ச்சி

முதல் குடியேற்றம் ஏற்பட்டு இருபத்தைந்து ஆண்டுகள் வரையில் சிட்னிக்கு வடக்கிலும் தெற்கிலும் ஏறத்தாழ நூறு மைல் அளவுள்ள கரையோர நிலப்பகுதி மட்டுமே குடியேற்ற மக்களுக்குத் தெரிந்திருந்தது. இப்பகுதிக்கு மேற்கே 'நீலமலைத் தொடர்' என்னும் பெயரில் பெரிய பீடபூமி அமைந்திருக்கிறது. 1813-இல் புதுமை காண்பதில் ஆர்வம் கொண்ட வீரர் சிலர் 'நீப்பியன்' ஆற்றைக் கடந்து, அப்பீடபூமியை அடைந்தனர்; 'மீன்' ஆற்றை அடுத்த பசும்புல் பள்ளத்தாக்கைக் கண்டனர். இம்முயற்சிக்குப் பிறகு சிட்னியிலிருந்து 'மாக்குவரி' ஆறுவரை மலைகளினூடே ஒரு பாதை அமைக்கப்பட்டது; 'பார்தஸ்ட்' என்னும் நகரமும் உண்டாக்கப்பெற்றது. பாதர்ஸ்ட் என்னும் குடியேற்ற நகரத்திலிருந்து வீரர் சிலர் மேற்கு நோக்கிச் சென்றனர்; 'லாக்லன்' ஆற்றைக் கண்டுபிடித்தனர். ஆக்ஸ்லி என்னும் அறிஞர் லாக்லன், மாக்குவரி என்னும் ஆறுகளின் பிறப்பிடங்களைக் கண்டறிந்தார்; அவ்வீரர் 'அர்பத்நட்' மலைத்தொடரையும், 'லிவர்பூல்' சமவெளியையும் நடந்து கடந்தார்; பின்பு பீல், காக்பூன் என்னும் ஆறுகளைக் கடந்து, மாக்குவரி என்னும் கடற்கரை ஊரை அடைந்தார். இவ்வாறே காப்டன் 'கிங்' முதலிய அறிஞர்கள் சிட்னி முதலிய கடற்கரை நகரங்களிலிருந்து நான்கு பக்கங்களிலும் பல மாதங்கள் நடந்து சென்று, பற்பல ஆறுகளையும்

மலைத் தொடர்களையும், ஏரிகளையும், பாலைவெளிகளையும், பசும்புல் தரைகளையும் கண்டறிந்தனர். இம் முயற்சியில் இப்பெருமக்கள் பட்ட இன்னல்கள் பலவாகும். இவருள் பிரயாணத்தில் உணவின்றி இறந்தார் சிலர்; நீரின்றி மடிந்தார் சிலர்; ஆஸ்திரேலியப் பழங்குடி மக்களால் கொல்லப்பட்டவர் சிலர். ஆயினும், புதுமை காண்பதில் வேட்கை கொண்ட இப்பெருமக்கள் உலையா ஊக்கத்துடன் மேற்கொண்ட உழைப்பின் பயனுகவே ஆஸ்திரேலியாவைப் பற்றிய விவரங்கள் பலவற்றை இன்று நாம் அறிந்து மகிழ்கின்ருேம்.

## எட்வர்ட் ஜான் அயர்

இங்ஙனம் ஆராய்ச்சி நடத்திய பெருமக்கள் மேற்கொண்ட உள்நாட்டு ஆராய்ச்சியைப் பற்றிய விவரங்களை ஓரளவேனும் நாம் அறிந்திருத்தல் நல்லதன்ருே? ஆதலின், எடுத்துக்காட்டாக, அப் பெருமக்களுள் ஒருவரான **எட்வர்ட் ஜான் அயர்** என்ற ஆங்கிலேயர் செய்த பிரயாண விவரத்தை மட்டும் இங்குக் கூறுவேன்.

அயர் 1815-ஆம் ஆண்டிற் பிறந்தவர். அவர் தமது பதினெட்டாம் வயதில் ஆஸ்திரேலியாவை அடைந்தார்; அதன் தென்கோடிப் பகுதியிலுள்ள மர்ரே என்னும் ஆற்றங்கரையில் ஆடுமாடுகளை மேய்த்து வந்தார். அவர் இயல்பாகவே புதுமை காண்பதில் வேட்கை மிக்கவர்; மர்ரே ஆற்றுப் பகுதிக்கு மேற்கிலும் வடக்கிலுமுள்ள நிலப்பகுதியை அதுவரை எவரும் ஆராயவில்லை என்பதை அறிந்தார். அதனுல் அவர் தம் கால்நடைகளைச் சிறிது சிறிதாக வடபகுதியிலும் மேற்குப் பகுதியிலும் மேய்க்கச் சென்ருர்; பல புதிய இடங்களைக்

கண்டார்; ஆங்காங்கு வாழ்ந்து வந்த பண்டைக் குடிகளையும் பார்த்தார். இங்ஙனம் இயற்கையின் தூண்டுதலால் உந்தப்பட்ட அவர், பல இடங்களுக்கும் சென்று, இறுதியில் டாரென்ஸ் (Torrens) என்னும் பெரிய ஏரி ஒன்றைக் கண்டுபிடித்தார்.

அவரது ஊக்கத்தையும் உழைப்பையும் உணர்ந்த தென் ஆஸ்திரேலிய மாகாண அதிகாரிகள் 1840-இல் ஆஸ்திரேலியாவின் வடபகுதியை ஆராய்ச்சி செய்ய ஒரு குழுவை அமைத்தனர். ஜான் அயர் அக்குழுவின் தலைவரானார். அவருடன் எட்வர்ட் ஸ்காட்டு என்பவரும் வேறு வெள்ளையர் நால்வரும் பழங்குடியைச் சேர்ந்த இளைஞர் சிலரும் புறப்பட்டனர். அவர்கள் பல குதிரைகளுடனும் ஆடுகளுடனும் அடிலெய்ட் என்னும் ஊரிலிருந்து புறப்பட்டனர்.

அவர்கள் முதலில் வடக்கு நோக்கிச் சென்றனர்; அங்குப் போகப்போக, நீர்வளம் இல்லாத பாலை நிலப்பகுதியைக் கண்டனர்; பாலை நிலத்தில் தண்ணீர் ஏது? அவர்கள் நீர்வேட்கையால் தவித்தனர். அவர்களை வழியிற்கண்ட பழங்குடிகள் அச்சம் மிகுந்து சிதறி ஓடினர். நீரின்றி இறக்கும்படியான துன்பநிலை நேருமோவென்று அயர் குழுவினர் அஞ்சினர். அவ்வமயம் அவர்களுக்கு எதிரில் பழங்குடி மக்கள் சிலர் வந்தனர். அவர்களைக் கண்டபோது அயர் தமக்கு நீர் வேண்டுமென்பதைச் சைகையால் உணர்த்தினர். அயர் கடலுக்குச் செல்ல வழி கேட்பதாக அப்பழங்குடிமக்கள் எண்ணி, அயர் குழுவினரை நெடுந்தொலை அழைத்துச் சென்று கடற்கரையில் விட்டனர். அயரும் அவர் குழுவினரும் அப்பொழுது அடைந்த வருத்தத்திற்கு எல்லையில்லை. ஆயினும், அயர் அக்கடற்கரையில் ஒரு

நீரூற்றைக் கண்டார். அனைவரும் அந்நீரூற்றில் ஆவல்தீர நீர்பருகினர்.

நீர் பருகிய அயர் அவ்விடத்தில் அமர்ந்து, நெடுநேரம் சிந்தித்தார்; வடக்கு நோக்கிச் செல்வதைவிட்டு, ஆஸ்திரேலியாவின் மேற்குப் பகுதியைக் கண்டறியத் துணிந்தார். உடனே அவர் பாக்ஸ்டர் என்பவரைமட்டும் உடன் வைத்துக் கொண்டு, மற்றவரை அடிலெய்டுக்கு அனுப்பி விட்டார். பழங்குடிமகன் ஒருவன்மட்டும் அயரையும் பாக்ஸ்டரையும் பின்தொடர்ந்தான்.

அயர் கடலோரமாகவே மேற்கு நோக்கிச் சென்றார். வழிமுழுதும் பாலைநிலமாகவே இருந்தது. வழியில் அவர்கள் நீர்வேட்கையால் தவித்தனர். பழங்குடிமக்கள் அவர்கள் கொண்டு சென்ற உணவுப் பொருள்களைத் திருடிச் சென்றனர்; அயருக்கு வழிகாட்டவந்த பழங்குடிமக்களை வழி காட்டவொட்டாமல் அழைத்துச் சென்றனர்; பாக்ஸ்டரைக் கொலை செய்தனர். எல்லாவகைத் துன்பங்களிலும் பழங்குடி இளைஞன் மட்டும் அயரைவிட்டுப் பிரியாமல் பிரயாணம் செய்தான்.

அயரும் பழங்குடி இளைஞனும் வழியிற் பட்ட இன்னல்கள் பல; உண்ண உணவும், பருக நீரும் இன்றித் தவித்த சந்தர்ப்பங்கள் பல; ஆயினும், மனம் தளராமல் அவர்கள் மேலும் நடந்து சென்றனர்; இறுதியில் மேற்கு ஆஸ்திரேலியாவில் உள்ள 'அல்பனி' என்னும் இடத்தைக் குறுகினர்; மேலும் வழி நடந்து, 'ஜார்ஜ் மன்னர் ஒலி' என்னும் இடத்தை அடைந்தனர். தமது குறிக்கோள் வெற்றி பெற்றதை எண்ணி அயர் மகிழ்ச்சியுற்றார்.

அயர் 1845-இல் இங்கிலாந்து சென்றார்; தம்

பிரயாண விவரங்களை ஒரு நூலாக எழுதி வெளி யிட்டார். ஆங்கில அரசாங்கம் அவரது உழைப் பைப் பாராட்டிப் பரிசளித்தது. நாடு கண்ட உழைப்பாளிகளின் பெயர்ப்பட்டியில் அவர் பெய ரும் இடம்பெற்றது. "உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ!" என்னும் உரைக்கு அவர் சான்முக விளங்கினூர்.

இவ்வாறு பலரது உலையா முயற்சியின் பய ஞகக் கண்டறியப் பெற்ற பகுதிகளில் மக்கள் நாளடைவில் குடியேறிப் பயிர்த்தொழில், வாணிகம் முதலிய பல துறைகளில் ஈடுபடலாயினர்.

## மக்கள் தொகை

ஆஸ்திரேலியாவின் மக்கள் தொகை கி. பி. 1933-ஆம் ஆண்டு ஜூன் 30-ஆம் நாளில் அறுபத் தாறு இலட்சம் என்று கணக்கெடுக்கப்பட்டது; அதற்கடுத்த ஆண்டு அதே நாளில் எழுபத்திரண்டு இலட்சம் என்று கணக்கெடுக்கப்பட்டது.

இன்று ஆஸ்திரேலியாவில் சதுர மைலுக்கு $2\frac{1}{2}$ பேர் வாழ்கின்றனர். இன்றைய மக்கள் தொகை எண்பது இலட்சமாகும். ஏறக்குறைய முப்பது லட்சம் சதுரமைல் நிலப்பரப்புடைய ஆஸ்தி ரேலியாவில் சதுரமைலுக்கு $2\frac{1}{2}$ பேர் இருப்பது, மக்கள் இடநெருக்கடியின்றி வாழ்வதைக் குறிக்கின் றது அல்லவா?

புதிய தென் வேல்ஸ் என்னும் மாநிலம் ஆஸ்தி ரேலியாவில் பத்திலொரு பங்கு நிலப்பரப்புடையது; இங்கு இருபத்தாறு இலட்ச மக்கள் வாழ்கின்றனர். ஆஸ்திரேலியாவில் நூறில் மூன்று பங்கு நிலப்பரப் புடைய விக்டோரியா மாநிலத்தில் பதினெட்டு

இலட்ச மக்கள் வாழ்கின்றனர். புதிய தென் வேல்ஸ், விக்டோரியா ஆகிய இரு மாநிலங்களே மிகப் பெரிய மக்கள்தொகை கொண்டவை. வடக்கு மாநிலம் ஆஸ்திரேலியாவில் நூறில் பதினேழு பங்கு நிலப்பரப்புடையதாக இருப்பினும், நாலாயிரத்து எண்ணூற்று ஐம்பது மக்களே இங்கு வாழ்கின்றனர்.

ஆஸ்திரேலியாவெங்கும் மக்கள் தொகையில் ஆண்களும் பெண்களும் ஏறக்குறையச் செம்பாதியளவே இருக்கின்றனர். ஆயினும், நகர்ப்புறங்களிலும், புதுக் குடியிருப்புகளிலும் பெண்கள் தொகை சிறிது மிகுதியெனக் கூறலாம்; குவீன்ஸ்லாந்து, மேற்கு ஆஸ்திரேலியா என்னும் மாநிலங்களில் உள்ள சிற்றூர்ப் பகுதிகளில் பெண்கள் தொகை சிறிது குறைவாகக் காணப்படுகிறது.

ஆஸ்திரேலியாவின் வடபகுதிகளில் பிற இனத்தவரும், கலப்பு இனத்தவரும் எண்ணிக்கையில் குறைந்து வருகின்றனர். இத்தகையோர் இப்போது ஆட்சியாளரால் கண்காணிக்கப்படுகின்றனர்; மேலும், பற்பல சமயப் பள்ளிகளின் உதவியாலும் நல்வாழ்வு பெறுகின்றனர். ஆஸ்திரேலியாவில் ஐரோப்பியரல்லாதார் ஐம்பதினாயிரவர் உள்ளனர். இவர்களுள் ஏறக்குறைய இருபத்தையாயிரவர் ஆசிய மக்கள். ஆசிய மக்களுள் பலர் முத்துக் குளிக்கும் தொழிலாளராகவும், சீனர்களாகவும் காணப்படுகின்றனர். ஆஸ்திரேலியாவில் குடியேறியுள்ள ஆசிய மக்களுள் பலர் சலவைத் தொழில், தோட்டத் தொழில், சமையல் தொழில் முதலியவற்றை நகரங்களில் செய்து வாழ்கின்றனர். பொதுவாகக் கூறின், ஆஸ்திரேலியாவில் பிரிட்டிஷ் மக்களினத்தவரே நூற்றுக்குத் தொண்ணூற்

றெட்டுப் பங்கினராய்ப் பிறப்புரிமை கொண் டுள்ளனர் எனலாம். ஆண்டுதோறும் மக்கள் தொகையின் பெருக்கத்திற்குக் காரணம், பிற நாட்டார் குடியேற்றமே ஆகும். இறந்தாரின் எண்ணிக்கை பிறந்தாரின் எண்ணிக்கையைக் காட்டிலும் சற்றுக் குறைவாக இருப்பதாலும் மக்கள் தொகை பெருகி வருகின்றது.

வடமேற்கு ஐரோப்பாவிலிருந்து ஆஸ்திரேலி யாவுக்குக் குடியேறும் மக்கட்குக் கண்டத்தின் தெற்குப் பகுதியும், தென்கிழக்குப் பகுதியும் பொருந்துவனவாக உள்ளன. சுரங்கங்களின் பொருட்டுக் குடியேறுவோர் மக்கள் தொகையில் நூறில் இரண்டு பங்கு இருக்கின்றனர். கடற்கரைப் பகுதிகளில் இலட்சத்து எண்பதினுயிர மக்கள் வாழ்கின்றனர் ; இவர்களுள் ஒரு இலட்ச மக்கள் கிழக்குக் கரைப் பகுதியான குவீன்ஸ்லந்தில் வாழ் கின்றனர்.

## நகரங்களில் மக்கட்பெருக்கம்

நகரங்களில் வாழும் மக்களே ஆஸ்திரேலியா வில் மிகுந்துள்ளனர். முழுத் தொகையில் நூற் றுக்கு அறுபத்து நான்கு பங்குள்ள மக்களை நாம் நகரங்களில் காண்கிறோம். இவ்வாறு நகர மக்கள் தொகை பெருகியிருப்பதற்குச் சிறப்பாக மூன்று காரணங்கள் கூறப்படுகின்றன : (1) ஆஸ்திரேலிய இளைஞர் எல்லோரும் தங்கள் தொழில்களின் பொருட்டு நகரங்களில் வாழவே விரும்புகின்றனர் ; (2) ஆஸ்திரேலியாவின் உழவரும், பிற தோட்டத் தொழிலாளரும் தங்கள் தொழிலில் நிறைந்த வருவாய் பெற்றுச் செல்வத்துப் பயனை நகரங்களில் இருந்து நுகரவே விரும்புகின்றனர் ; (3) கடற்

கரையைச் சூழ்ந்துள்ள பெரிய நகரங்களில் இயந்திரத் தொழில் முன்னேற்றமும், வாணிக முன்னேற்றமும் வளம்பெற்று வருகின்றன. இத் தகைய காரணங்களால் ஆஸ்திரேலியாவில் நகர மக்கள் தொகையே பெருகியுள்ளது என்று கூறலாம்.

## மக்களும் தொழில்களும்

ஆஸ்திரேலிய மக்கள் எவ்வெத்தொழில்களில் எவ்வெவ்வாறு ஈடுபட்டு வாழ்கின்றனர் என்பதை இனி அறிவோம்: கி. பி. 1921-இல் எடுத்த கணக்கின்படி மக்கள் தொகையில் இருபத்து மூன்று இலட்ச மக்கள் உழைத்து உண்பவராகக் காணப்படுகின்றனர். இவர்களுள் பெரும்பான்மை யோர் கூலி வேலை செய்தே பிழைப்பவராவர். இயந்திரத் தொழிலில் ஏழேகால் இலட்ச மக்களும், பயிர்த் தொழிலில் ஆறு இலட்ச மக்களும் ஈடுபட்டு வாழ்ந்தனர் என்று அறிகிறோம். மேலும் வீட்டு வாழ்க்கையை ஒட்டிய சிறு தொழில்களை இரண்டு இலட்சத்துப் பத்தாயிரவர் செய்து பிழைக் கின்றனர். கி. பி. 1933-இல் எடுத்த கணக்கின்படி மக்கள் தொகையில் 31,15,651 மக்கள் உழைத்து உண்பவராவர். இவர்களுள் நூற்றுக்கு எழுபத்து நால்வர் ஆண் மக்களாவர். ஆஸ்திரேலியாவில் நகர வாழ்வோடு இயைந்த தொழில்களே சிறப்புற்று வருகின்றன எனவும், சிற்றூர்களைச் சார்ந்த தொழில்களும், சுரங்கத் தொழிலும் குறைந்து வரு கின்றன எனவும் அதிகாரிகள் என்னிடம் கூறினர்.

## மக்கள் குடியேற்றம்

இனி, ஆஸ்திரேலியாவில் நடைபெறும் குடி யேற்றத்தை ஆராய்வோம்: புதிதாகக் குடியேறும்

மக்கள் எல்லோரும் நகர வாழ்வையே விரும்பி, நகரங்களில் நடைபெறும் தொழில்களோடு தம்மைத் தொடர்புபடுத்திக்கொள்கின்றனர். இதனால் வேலையில்லாத் திண்டாட்டம் நகரங்களில்தான் ஏற்படுகின்றது; வேலையில்லாக் கொடுமையால் பொது மக்களுடைய கருத்துப் பாழடைகின்றது; தேர்தல் காலத்தில் பல இன்னல்கள் விளைகின்றன. வேலையற்ற மக்களைப் பார்த்து, "நீங்களெல்லாம் சிற்றூர்ப் பகுதிகட்குச்சென்று வாழ்தல்வேண்டும்," என்று சொல்லினும், அவர்கள் நகரங்களைவிட்டு வேறிடங்கட்குச் செல்ல விரும்புவதில்லை. இத்தகைய பல தொல்லைகளையும் ஆராய்ந்த ஆஸ்திரேலிய அரசாங்கம், புதுக்குடியேற்றத்தைத் தடைசெய்து வருகின்றது.

'வெள்ளை ஆஸ்திரேலியக் கொள்கை'யைச் சட்டமாக்கித் தென் ஐரோப்பியரான இத்தாலியரையும், மால்டிஸ்களையும் ஆஸ்திரேலியாவில் குடியேற விடாது தடுத்ததை நாம் ஆஸ்திரேலிய நாட்டு வரலாற்றில் படிக்கின்றோம். மேலும் ஆஸ்திரேலிய அரசாங்கம், பல இடங்களில் பெருகியுள்ள மக்களை ஆங்காங்கே மனித வாழ்வற்ற புதிய இடங்களில் குடியேறும்படி செய்துவருகின்றது. இதன் பொருட்டுக் கண்டத்தின் பல பகுதிகள் ஆராயப்படுகின்றன; குடியேறுவதற்கேற்ற இடங்கள் கண்டுபிடிக்கப் படுகின்றன. இவ்வாறு புதிய குடியிருப்புக்களில் வாழப்புகுந்த மக்கட்கு ஆஸ்திரேலிய அரசாங்கம் வேண்டிய நிலமும், அறிவியற் பொருளும், விதையும், கடனும், கல்வியும், பிற எல்லாச் சமுதாய நலங்களும் கொடுத்துதவுகின்றது; பரந்த நிலங்களை உடைமையாக்கி, அங்கே மக்கள் நெருங்கி வாழுமாறு செய்கின்றது.

ஆஸ்திரேலியாவில் மக்களை வெளியேற்றும் அரசியல் திட்டங்களும் உருவாயின. கி. பி. 1920-இல் ஏற்பட்ட "காமென்வெல்த் கூட்டு முயற்சியும் பல அரசுகளின் குடியேற்றக் கொள்கையும்" என்ற அரசியல் திட்டமும், கி. பி. 1925-இல் ஏற்பட்ட 'பிரிட்டிஷ், காமென்வெல்த் அரசுகளின் வெளி யேற்ற ஒப்பந்தம்' என்ற அரசியல் திட்டமும் குறிப்பிடத்தக்கவை. இவற்றால் மிக்க பயன் விளை யாமற்போனது குறிக்கத்தக்கது. கி. பி. 1921-முதல் கி. பி. 1925 வரை குடியேற்றம் ஆஸ்திரேலியாவில் உச்சநிலை அடைந்தது; கி. பி. 1927-இல் சிறிது குறையத் தலைப்பட்டது. மீண்டும் கி. பி. 1930-முதல் கி. பி. 1940 வரை தென் ஐரோப்பாவினின்று மக்கள் எண்ணிறந்தவராய்க் குடியேறலாயினர். ஆஸ்தி ரேலிய அரசாங்கம் புதிய இடங்களைக் கண்டு பிடித்துப் புதுக்குடியிருப்புக்களில் மக்களை வாழு மாறு செய்ததால், குடியேற்றத்தால் நிகழ்ந்த இட நெருக்கடி மறையலுற்றது. பலவகையான கழகங் களைத் தோற்றுவித்து, அவற்றுள் இளைஞர்களை ஒன்று சேர்த்து, இடநெருக்கடி இல்லாத பல இடங் கட்கு அனுப்புவதில் ஆட்சியாளர் கருத்துச் செலுத்தி வருகின்றனர். இதனால் இடநெருக்கடியும், வேலையில்லாக் கொடுமையும் ஆஸ்திரேலியாவில் படிப்படியாகக் குறைந்து வருகின்றன என்று அரசாங்க அதிகாரிகள் என்னிடம் கூறினர்.

# 4. அரசியல்

## பொற்கனிகள்

ஆஸ்திரேலியாவில் கம்பள உற்பத்தி பெருகத் தொடங்கியதும் குடியேற்றம் வளர்ச்சியுற்றது. 1851-இல் புதிய தென் வேல்ஸ் [1] மாகாணத்தில் ஒரு லட்சத்துத் தொண்ணூறாயிரம் மக்களும், விக்டோரியா [2] மாகாணத்தில் எழுபத்தேழாயிரம் மக்களும், தென் ஆஸ்திரேலியாவில் எழுபத்தெட்டாயிரம் மக்களும் வாழ்ந்தனர். புதிய தென் வேல்ஸ் மாகாணத்திலுள்ள பாதர்ஸ்ட் என்னும் இடத்திற்கு இருபது கல் வடக்கிலுள்ள ஓரிடத்தில் 1851-இல் பொற்சுரங்கம் கண்டுபிடிக்கப்பட்டது. விக்டோரியா மாகாணத்திலும் மெல்பர்ன் நகருக்கருகில் மற்றொரு பொற்சுரங்கம் கண்டறியப்பட்டது. இங்ஙனம் பல பொற்சுரங்கங்கள் ஒன்றன்பின் ஒன்றாகக் கண்டறியப்பெற்றன. அதுவரை கண்டுபிடிக்கப்பட்டு வேலை நடைபெற்று வந்த செப்புச் சுரங்கங்கள் சிறிது காலம் கைவிடப்பட்டன. எல்லாத்தொழிலாளரும் பொற்சுரங்கங்களில் வேலை செய்யத் தொடங்கினர். பொற்சுரங்கங்கள் கண்டு பிடிக்கப்

1. ஆஸ்திரேலியாவில் முதலிற் குடியேறியவர் வேல்ஸ் பகுதியினராதலின் தாம் குடியேறிய நிலத்திற்குப் புதிய தென் வேல்ஸ் எனப் பெயரிட்டனர் என்று ஒருசார் ஆசிரியர் கூறுகின்றனர்.

2. இங்கிலாந்து அரசியாராகிய விக்டோரியா காலத்தில் மக்கள் குடியேறிய நிலம் 'விக்டோரியா மாகாணம்' எனப் பெயர் பெற்றது. அதன்தலை நகரம், விக்டோரியா அரசியாரின் முதல் அமைச்சரான 'மெல்பர்ன்' பிரபுவின் பெயரைப் பெற்றது.

பட்ட செய்தி உலக நாடுகளிற் பரவியது. அதன் பயனாக ஐரோப்பியரும், வட அமெரிக்கரும், சீனரும் ஆயிரக்கணக்கில் மெல்பர்ன் நகருக்கு வந்தனர். விக்டோரியா மாகாணத்தில் இதனால் ஜனத்தொகை பெருகிற்று. 1851-ஆம் ஆண்டு விக்டோரியா நிலப் பகுதி ஒரு தனி மாகாணமாக்கப்பட்டது.

பின்னர்ப் படிப்படியாகப் பிற மாகாணங்களி லும் தங்கச் சுரங்கங்களும், நிலக்கரி, செப்புச் சுரங் கங்களும் கண்டறியப்பட்டன. ஆங்காங்கு மக்கள் குடியேறத் தொடங்கினர். 1860-இல் புதிய தென் வேல்ஸ், குவீன்ஸ்லாந்து, தென் ஆஸ்திரேலியா முதலிய மாகாணங்கள் ஏற்பட்டன. ஒவ்வொரு மாகாணமும் தனிப்பட்ட முறையில் ஆட்சி நடத்தத் தொடங்கியது. ஒவ்வொரு மாகாணத்திலும் சட்ட சபை அமைக்கப்பட்டது. ஒவ்வொரு மாகாணத் திலும் குடியேறிய மக்களுக்குச் சட்டத்தின் மூலம் நிலப்பங்கீடு செய்தல், பயிர்த்தொழிலை ஊக்கு வித்தல், கால்நடைகளை வளர்த்தல், மேய்ச்சல் நிலங்களைப் பாதுகாத்தல் என்பன பற்றிப் பல சட்டங்கள் ஏற்படுத்தப்பட்டன.

சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியில் இவை பற்றிய சட்டங்கள் ஒவ்வொரு மாகாணத்திலும் மாற்றி அமைக்கப்பட்டன. பல நாடுகளிலிருந்து வந்த மக்களைக் குடியேற்றுவதற்கு ஆஸ்திரேலிய மாகாணங்கள் உடன்படவில்லை. அதனால் மாகாண சட்டசபைகள் அவ்வயல் நாட்டார்க்குப் பல தடை களை விதித்தன. அயல் நாட்டவருள் சிறப்பானவர் சீனர். சீனர் கடுமையாக உழைப்பவர்; வீண் செலவு செய்யாதவர். அவர்கள் பிற தொழிலாளரை விட உழைப்பிலும் பொருளீட்டுவதிலும் உயர்ந்து காணப்பட்டனர். அவர்களைக் கண்டு வெள்ளை

ஆஸ்திரேலியர் வெறுத்தனர். அவர்களை எவ்வாறு விரட்டுவது என்பது ஆஸ்திரேலியாவில் பெரிய கேள்வியாகிவிட்டது. எல்லா மாகாணப் பிரதிநிதி களும் கூட்டம் கூடி ஆலோசித்தனர். ஆஸ்திரேலிய நடு அரசாங்கம் * ஒன்று இல்லாததால் சீனர்மீது ஒரு பொது நடவடிக்கை எடுக்க இயலவில்லை. சீனரை ஆஸ்திரேலியக் குடிகளாக்குவதற்கு எல்லா மாகாணங்களும் இணங்கவில்லை. பிரிட்டிஷ் ஆட் சிக்கு உட்பட்ட வேறு நாட்டு மக்களையும் ஆஸ்தி ரேலியர் வெறுத்தனர்; ஆனால் அவர்களை அப்புறப் படுத்துதல் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு மாறுபட்ட செயலாகும் என்பதை எண்ணி வாளா இருந்தனர். இத்தொல்லைகளால், 'இனிக் குடியேறும் புதியவர் அவர் இறங்கும் துறைமுகத்தில் வைக்கப்படும் தேர்வில் தேறவேண்டும். இன்றேல், தம் நாட்டுக்குத் திரும்பிவிடவேண்டும்' என்று ஆஸ்திரேலிய அதி காரிகள் விதி செய்தனர்; நடு அரசாங்கம் ஒன்றை அமைக்கவும் முனைந்தனர்.

## ஆஸ்திரேலிய நடு அரசாங்கம்

ஆஸ்திரேலியாவுக்கு நடு அரசாங்கம் ஒன்று ஏற்படுதல் வேண்டும் என்பதைப் பல மாகாணங் கள் ஆதரித்தன; சில எதிர்த்தன. நடு அரசாங்கம் ஏற்படுத்துவது பற்றிச் சிட்னி, கொரோவா முதலிய இடங்களில் மாகாணப் பிரதிநிதிகள் கூடி ஆலோ சித்தனர். எல்லா மாகாண முதல் அமைச்சர்களும் மெல்பர்ன் நகரத்தில் 1899-இல் கூடி ஒரு முடிவிற்கு வந்தனர். அம்முடிவுப்படி நடு அரசாங்கம் அமைத் தற்குரிய சட்ட திட்டங்கள் வரையறுக்கப்பட்டன.

---

* Commonwealth

புதிய தென்வேல்ஸ், விக்டோரியா, தென் ஆஸ்தி ரேலியா, குவீன்ஸ்லாந்து, மேற்கு ஆஸ்திரேலியா, டாஸ்மேனியா என்னும் ஆறு மாகாணங்களும் சேர்ந்து நடு அரசாங்கத்தை ஏற்படுத்தின.

இவை ஒவ்வொன்றிலுமிருந்து ஆறு பிரதிநிதி களைக் கொண்டதே செனெட்சபை. இது நடு அர சாங்கத்தின் மேல் சபையாகும். கீழ்ச்சபையில் ஒவ்வொரு மாகாணத்திலுமிருந்து தேர்ந்தெடுக்கப் பட்ட பிரதிநிதிகள் உறுப்பினராக இருப்பர். ஒவ் வொரு மாகாணத்தின் மக்கள் ஜனத்தொகைக்கு ஏற்ப, இவ்வுறுப்பினர் ஐவருக்குக் குறையாமல் தேர்ந்தெடுக்கப்படுவர். இவ்விரண்டு சபைகளின் உறுப்பினர் ஒவ்வொருவரும் ஆண்டு ஒன்றுக்கு 400 பவுன் ஊதியமாகப் பெறுவர்.

இப்பேரவைகள் இரண்டும் முழு ஆஸ்திரேலி யாவைப் பற்றிய வாணிகம், கப்பல் தொழில், இரயில்வே, வரிவிதிப்பு, தபால் தந்தி இலாகா, நாட் டுப் பாதுகாப்பு, மக்கள் தொகைக் கணக்கு, நாணயமாற்று, அரசாங்க அவைகள், பாங்குகள், மணமும் மணநீக்கமும், குடியேற்றம், கைத் தொழில், வழக்குகளைத் தீர்த்து வைத்தல் முதலிய துறைகளில் தமது அதிகாரத்தைச் செலுத்தும். இவ்விரண்டிற்கும் மேலதிகாரியாக அரசப் பிரதிநிதி ஒருவர் அமர்த்தப்பட்டார். ஆஸ்திரேலிய உயர் நீதி மன்றம் ஏற்படுத்தப்பட்டது.

சுருங்கக் கூறின், நமது இந்திய நாட்டிலுள்ள மாகாண அரசாங்கங்களைப் போல, ஆஸ்திரேலிய மாகாணங்கள் மாகாண ஆட்சியை நடத்திவந்தன. டில்லியில் இருக்கும் நடு அரசாங்கத்தைப் போல ஆஸ்திரேலிய நடு அரசாங்கம் ஆஸ்திரேலியா முழு வதிலும் ஆட்சி நடத்தத் தொடங்கியது. நடு அர

சாங்கத்தின் தலைநகரம் புதிய தென்வேல்ஸில் உள்ள கான்பரா என்பது. அங்குத்தான் 1927 முதல் மேற்சொல்லப்பட்ட இரண்டு அவைகளும் இருந்து பணியாற்றுகின்றன. இந்த நடு அரசாங்கத்திற்கு காமன்வெல்த் ஆப் ஆஸ்திரேலியா (Commonwealth of Australia) என்பது பெயர்.

## சட்டங்கள்

எல்லா நாடுகளிலும் ஏற்பட்டுள்ளபடியே தொழிலாளருக்குரிய வேலை நேரம், ஓய்வு நேரம், சம்பளம், தொழிலுக்குரிய வயது ஆகியவை பற்றிய சட்டங்களை ஆஸ்திரேலிய அரசாங்கம் செய்துள்ளது; இவ்வாறே பண்ணைகளிலும் சுரங்கங்களிலும் காடுகளிலும் தோட்டங்களிலும் வேலை செய்வோரின் சுகாதார வசதிகளைக் கவனிக்கச் சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன; பெண் தொழிலாளருக்கு உரிய எல்லாச் சட்டங்களும் செய்யப்பட்டுள்ளன.

## சமூக நலத் திட்டங்கள்

சமூகத்தில் மிகத் தாழ்ந்துள்ள மக்களது பொருளாதார நிலையையும், அதன் வாயிலாக வாழ்க்கை நிலையையும் உயர்த்த வேண்டுமென்பது அரசாங்கத்தின் அழுத்தமான கருத்தாகும். இது நடைமுறையில் நிறைவேறச் சமூக நலத் திட்டங்கள் சில ஏற்பட்டுள்ளன. அவற்றை ஐவகையாகக் கூறலாம் :

1. (1) அனைவருக்கும் கட்டாயக் கல்வி அளித்தல், (2) எல்லா ஊர்களிலும் நூல் நிலையங்களை அமைத்தல், (3) பொழுது போக்கிற்கான வசதி அளித்தல், (4) நாடெங்கும் மின்சார வசதி அளித்தல் முதலியன முதல் திட்டத்தின்பாற்படும்.

2. குடிமக்கள் அனைவருக்கும் வேலை தேடித் தருவதில் அரசாங்கம் முனைதல் குறிப்பிடத்தக்கது. இதனை ஆஸ்திரேலிய அரசாங்கத்தார் மிக்க கவனத்துடன் செயலாற்றி வருகின்றனர். வயது வந்த ஒருவர் உடல் நலம் இல்லாமல் இருப்பினும் அல்லது வேலையை விட்டு விட நேரினும் அவருக்கும் அவரது குடும்பத்துக்கும் உரிய உதவித் தொகையை அரசாங்கம் கொடுக்கின்றது. இத்தகைய வசதிகள் பலவும் செய்தலால், ஆஸ்திரேலியாவில் மக்கள் வேலையின்றித் தவிப்பது மிகக் குறைவாக இருக்கின்றது.

3. அலுவலிலிருந்து ஓய்வு பெற்றவர்க்கும், உடற் குறையுடையவர்க்கும், கைம்பெண்களுக்கும் அரசாங்கம் உதவிச் சம்பளம் கொடுக்கின்றது. மணம் செய்துகொள்வதற்கும் பிள்ளை வளர்ப்புக்கும் அரசாங்கம் கடன் கொடுக்கத் திட்டம் வகுத்துள்ளது.

4. புதிய நகரங்களை அமைக்கவும், பிற்போக்கு வாழ்விடங்களைத் தூய்மைப்படுத்தவும், மக்களுக்குத் தேவைப்படும் நன்னீரை வழங்கவும், கழிவுநீரை அப்புறப்படுத்தவும் சில திட்டங்கள் கையாளப்படுகின்றன.

5. வீடு கட்டுதல், சிறிய தொழில்களைத் தொடங்குதல் முதலியவற்றுக்குத் தேவையான முதலை அரசாங்கம் கடனுதவி உதவுகிறது.

இவையல்லாமல், ஆஸ்திரேலிய அரசாங்கம், வெள்ளத்தாலும் நிலநடுக்கத்தாலும் ஏற்படுகின்ற சேதங்களைப் பழுது பார்த்துச் சீர்திருத்தப் பல திட்டங்களையும் அமைத்துள்ளது.

மேலும், மக்கள் தங்கள் செல்வத்திற் சிறிதளவைச் சேமித்து அரசாங்கத்திற்குக் கொடுப்பது

பேருதவியாகும் அன்ருே? அத்தகைய வாழ்க்கையே வருமுன்னர்க் காக்கும் பெருவாழ்வாகும். இதனை மக்கள் உணருமாறு செய்வதற்கே, ஆஸ்திரேலிய அரசாங்கம் நாட்டு நல நிதித் திட்டத்தை ஏற்படுத்தியுள்ளது. நிறைந்த வருவாயுள்ள ஒவ்வொருவரும் தமது வருவாயில் ஓரளவை அரசாங்கத்திற்குச் சில தவணைகளில் செலுத்துகின்றனர். இவ்வாறு மக்கள் செலுத்திய நிதி சமூக நலத்திற்காகவே பயன்படுகிறது.

## அரசியல் பிரதிநிதிகள்

ஆஸ்திரேலிய அரசாங்கப் பிரதிநிதிகள் ஒவ்வோர் அயல் நாட்டிலும் ஒருவராக இருந்து வருகின்ருர். ஆயின், இலண்டனில் மட்டும் ஆஸ்திரேலிய மாகாணம் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு பிரதிநிதியும் உடனிருந்து வருகிருர். ஒவ்வொரு ஆஸ்திரேலிய மாகாணமும் பிரிட்டனுடன் தனித்த முறையில் உறவு கொண்டிருப்பதே இதற்குக் காரணமாகும்.

## நியூஜீலந்துடன் உறவு

ஆஸ்திரேலியாவையும் நியூஜீலந்தையும் 'தெற்குப் பகுதி நாடுகள்' என்னும் பொருளில் 'ஆஸ்திரேலியா' என்று மேளுட்டார் அழைப்பர். நியூஜீலந்து, ஆஸ்திரேலியாவிற்கு ஏறக்குறைய 1200 மைல் தென் கிழக்கே உள்ள தீவுக் கூட்டமாகும். அங்குப் பதினைந்து இலட்சம் மக்கள் வாழ்கின்றனர். இந்தியர் பல்லாயிரவர் அங்குக் குடியேறியுள்ளனர்.

இந்த இரு நாடுகளும் பிரிட்டிஷ் பேரரசுக்கு உட்பட்டவை; மேலும் ஒன்றுக்கொன்று அண்மையில் இருப்பவை. ஆதலால், பாதுகாப்பு, வெளி

நாட்டுக் கொள்கை, பொருளாதாரத் திட்டம், விமானப் போக்குவரவு முதலிய துறைகளில் இவ்விரு நாட்டு அரசாங்கங்களும் ஒத்துழைக்கின்றன.

பிறநாடுகளுடன் உறவு கொள்வதிலும் இவ்விரண்டும் ஒன்றை ஒன்று கலந்து கொள்கின்றன. தம்மைச் சுற்றியுள்ள தீவுகளைப்பற்றியும் அவை ஒத்த கருத்தைக் கொண்டுள்ளன. இரு நாடுகளின் அமைச்சர்களும் அடிக்கடி கூடுகின்றனர்; ஒருமுறை ஆஸ்திரேலியத் தலைநகரான கான்பராவிலும், மறுமுறை நியூஜீலந்தின் தலைநகரான வெல்லிங்டனிலும் சந்திக்கின்றனர். ஆஸ்திரேலிய அரசாங்கம் வெல்லிங்டனில் ஓர் அலுவலகத்தை அமைத்துள்ளது. அவ்வாறே நியூஜீலந்தின் அரசாங்கமும் கான்பராவில் தனது அரசாங்க அலுவலகத்தை நிறுவியுள்ளது. இத்தகைய நட்புமுறையால் ஆஸ்திரேலியாவும், நியூஜீலந்தும் மனம் ஒன்றுபட்ட தமையனும் தம்பியும் போல உறவாடி வருகின்றன; இன்பதுன்பங்களில் ஒன்றுபட்டு உழைக்கின்றன.

## அரசியலில் அமைதி

ஆஸ்திரேலிய நாட்டில் பலதுறை வளர்ச்சிக்கும் அடிப்படையான காரணம், அந்நாட்டு அரசியல் கட்சிகள் அனைத்தும் நாட்டு முன்னேற்றம் பற்றிய அடிப்படைக் கருத்தில் அசைக்க முடியாத ஒற்றுமை உடையனவாக இருத்தலால் ஆகும்.

பிரிட்டிஷ் ஆட்சிக்கு உட்பட்ட நாடுகளிலிருந்து இறக்குமதியாகும் பொருள்களுக்குக் குறைவான வரிவிதித்தல், வெள்ளையரையே ஆஸ்திரேலியாவில் குடியேற்ற வேண்டும் என்னும் கொள்கை, பொதுவுடைமைக் கொள்கையை எதிர்த்தல், பிரிட்டனுடன் நெருங்கிய உறவு கொண்டிருத்தல் போன்ற

கொள்கைகளில் எல்லாக் கட்சிகளும் ஒத்த கருத்துடையனவாக இருக்கின்றன. நாட்டின் சிறப்புத் தொழில்களை அரசியலார் நடத்தல் வேண்டும் என்பதை எல்லாக் கட்சிகளும் ஆதரிக்கின்றன. இங்ஙனம் அடிப்படைக் கொள்கைகள் ஒற்றுமை கொண்டிருத்தலாலும், தேர்தல் பிரசாரம் வானொலி வாயிலாகவே நடைபெறுவதாலும், அந்நாட்டில் கட்சிக் குழப்பங்கள் இல்லை; கட்சிகளினிடையே தீராத பகைமை இல்லை; ஒருவரை ஒருவர் தாக்கிப் பேசுவதில்லை; எல்லாக் கட்சியினரும் சிறந்த மனிதப் பண்புடன் நடந்துகொள்கின்றனர்.

# 5. கல்வி

## தொடக்கப்பள்ளிகள்

ஆஸ்திரேலியாவில் நடைபெறும் கல்விமுறை நம்மவர் கருத்தூன்றிப் படித்து உணரத்தக்கது. அங்கு ஒவ்வொரு குடிமகனும் பதினுன்கு ஆண்டு வரை இலவசக் கட்டாயக் கல்வி கற்க வசதியிருக்கின்றது. அங்கு நடைபெறும் தொடக்கப்பள்ளிகள் பிள்ளைகள் விரும்பும் இன்பப் பூங்காக்களாக இலங்குகின்றன. பள்ளியில் பிள்ளைகளுக்கு முற்பகலில் பாலும் இடைவேளையில் உணவும் அரசாங்கம் உதவுகின்றது. அங்கு நான்குவிதத் தொடக்கப் பள்ளிகள் பணியாற்றுகின்றன. இவற்றுள் **அரசாங்கப் பள்ளிகள்** என்பன ஒருவகை. இவை அரசியலாரால் நடத்தப்படுகின்றன. பிள்ளைகளை உயர்நிலைப் பள்ளிக்குரிய மாணவராகச் செய்வது இவற்றின் வேலையாகும். இப்பள்ளிகளுள் ஒவ்வொன்றும் அஃது அமையப்பெற்ற ஊரிலுள்ள பெற்ரேர்—குடிமக்கள் சங்கத்தின் மேற்பார்வையில் இருந்து வருகின்றது. ஏறத்தாழ எண்பது பிள்ளைகள் உள்ள ஒவ்வோர் ஊரிலும் இப்பள்ளி அமைந்துள்ளது.

## அரசாங்க உதவிபெறும் பள்ளிகள்

இப்பள்ளிகள் பிள்ளைகளின் பெற்ரேர் ஒத்துழைப்பால் அமைந்தவை. இத்தகைய ஒரு பள்ளியின் மாதச் செலவின் ஒரு பகுதியை அரசியலார் ஏற்கின்றனர்; எஞ்சிய பகுதியை ஊரார் ஏற்றுக் கொள்கின்றனர்; இப்பள்ளி ஆசிரியரது சம்பளம் குறைவானது. அதனுல் அவருக்கு ஊரார் இலவச

உணவு அளிக்கின்றனர். இக்கூட்டுறவால் பிள்ளை களின் பெற்றோரும் ஆசிரியரும் நெருங்கிப் பழகு கின்றனர். நிலமுடையவரும் பணமுடையவரும் இவ் வாசிரியருக்குப் பலவழிகளில் உதவிபுரிகின்றனர்.

## அஞ்சல்முறைப் பள்ளிகள்

ஆஸ்திரேலியாவில் பண்ணைகள் மிகுதியாக இருக்கின்றன. அவை ஒன்றுக்கொன்று பல மைல் தொலைவில் உள்ளன. அதனால் அப்பண்ணைகளில் வாழும் பிள்ளைகள் ஓரிடத்தில் ஒன்று சேருவதில்லை. எனவே, ஒவ்வொரு பண்ணையிலுமுள்ள பிள்ளை களுக்கும் தனிப்பட்ட முறையில் கல்வி கற்பிக்க வேண்டும். ஆயின், ஒவ்வொரு பண்ணையிலும் பள்ளிவைக்கத்தக்க அளவில் பிள்ளைகள் இல்லை. ஆஸ்திரேலிய அரசாங்கக் கல்வித்துறையினர் இப் பண்ணைப் பிள்ளைகளுக்கு அஞ்சல் வாயிலாகக் கல்வி கற்பிக்கின்றனர். ஒவ்வொரு பண்ணையிலும் ஒரு பள்ளிக்கூடக் கட்டிடம் அமைந்திருக்கிறது. அப் பண்ணையில் உள்ள பிள்ளைகள் அங்குக் கூடுவர். அப்பிள்ளைகள் ஓர் ஆசிரியரின் மேற்பார்வையில் கல்விகற்பர். கடிதங்கள், ஒலிப்பதிவுத் தட்டுக்கள், படங்கள், திரைப்படங்கள், வானொலி இவற்றின் வாயிலாகப் பாடங்கள் கற்பிக்கப்படுகின்றன. இவர்களுக்குத் தேர்வுகளும் விடுமுறை நாட்களும் உண்டு.

## கைத்தொழில் பள்ளிகள்

பன்னிரண்டு வயதுமுதல் பதினைந்து வயது வரையுள்ள மாணவர் கைத்தொழில் பள்ளிகளில் கல்வி கற்கின்றனர். கோழி வளர்த்தல், தேனீ வளர்த்தல், தோல் பதனிடுதல், தச்சுத் தொழில்,

கொல்லத் தொழில், தாவரங்களைப் பயிரிடுதல், சாலைகளை அமைத்தல், அணைகட்டுதல் முதலிய பல வகைத் தொழில்கள் இங்குக் கற்பிக்கப்படுகின்றன. இங்குக் கல்விகற்கும் மாணவர்க்குப் பகலுணவும் போக்குவரவு வசதிகளும் பள்ளிச் செலவில் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன. இப்பள்ளி ஆசிரியர்களும் மாணவர்களும் வீடுகள் கட்டுவதிலும் பயிற்சி பெற்றுள்ளனர்.

## உயர்நிலைப் பள்ளிகள்

இப்பள்ளிகள் ·இரண்டுவகைப்படும். ஒன்று, மாணவரைக் கல்லூரிப் படிப்பிற்குத் தகுதி உடைய வராகச் செய்வது; மற்றொன்று, அவர்களைத் தொழில்துறைகளில் தகுதியுடையவராகச் செய்வது. குடும்ப வாழ்க்கைக்கு உரிய பாடங்கள், பெண் களுக்குச் சிறப்பாகக் கற்பிக்கப்படுகின்றன. ஆங்கிலம், கணிதம், இசை, வரலாறு, மொழி, வாணிகம் முதலிய பாடங்கள் அனைவருக்கும் பொதுவானவை.

தொழிற்பயிற்சி பெறும் மாணவருக்கு ஒவ் வொரு தொழிலையும் கற்பிக்க, அவ்வத்துறையில் வல்ல தொழிலாளர் பக்கத்துத் தொழிற்சாலையி லிருந்து வருவர். இங்ஙனம் குறித்த நேரத்தில் அவர்கள் வரவேண்டும் என்பதும், அவர்கள் பிள்ளை களுக்குக் கற்பிக்கும் கால அளவு அவர்கள் தொழில் செய்யும் நேரமாகக் கருதப்படல் வேண்டுமென்பதும் அரசாங்கத்தின் கட்டளையாகும். தலைமையாசிரிய ருக்குப் பள்ளி எல்லைக்குள்ளேயே வீடு கொடுக்கப் படுகிறது. மாணவர் விடுதிகள் மிகச்சிறந்த முறையில் நடைபெறுகின்றன.

## கல்லூரிகளும் பல்கலைக் கழகங்களும்

ஆஸ்திரேலியாவில் இருபத்தைந்து கல்லூரிகள் இருக்கின்றன; ஆறு பல்கலைக் கழகங்கள் பணி யாற்றுகின்றன. ஒவ்வொரு கல்லூரிக்கும் நூறு ஏக்கர்ப் பரப்புள்ள பூங்காவும் விளையாடுமிடமும் அமைந்திருக்கின்றன. ஒவ்வொரு கல்லூரிக்கும் தேர்வுநடத்திப் பட்டம் கொடுக்கும் உரிமை உண்டு. மாணவர்க்கு இடமில்லை என்று எந்தக் கல்லூரியும் சொல்லலாகாது என்பது அரசாங்க ஆணையாகும்.

பல்கலைக் கழகங்களும் கல்வி கற்பிக்கும் நிலை யங்களாக இருக்கின்றன. அவை தேர்வு நடத்திப் பட்டம் வழங்குகின்றன. கிராமப் பல்கலைக் கழகங் களில் பணியாற்றும் ஆசிரியர் நகரப் பல்கலைக் கழ கத்தில் பணியாற்றும் ஆசிரியரைவிட மிகுந்த ஊதியம் பெறுகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது. இவ்வூதிய மிகுதியால் ஆசிரியர் பலர் கிராம வாழ்க்கையையே விரும்பிச் செல்கின்றனர். எனவே, கிராமப் பல்கலைக் கழகங்களிலும் கல்லூரிகளிலும் ‘ஆசிரியர் பஞ்சம்’ ஏற்படுவதில்லை.

நான் சிட்டினியிலுள்ள பல்கலைக் கழகத்தைக் காணச் சென்றேன். அங்கு மருத்துவக் கல்வி சிறந்த முறையில் கற்பிக்கப்படுகிறது. அங்கு இந்திய மாணவர் மருத்துவக் கல்வி கற்கின்றனர். அவர்கள் என்னைக் கண்டதும், தாயைக் கண்ட சேய்கள் போல என்னை நோக்கி மலர்ந்த முகத் துடன் ஓடிவந்து, நமது தாய் நாட்டைப் பற்றி விசாரித்தனர். இந்தியர் பலர் ஆஸ்திரேலியப் பல் கலைக் கழகங்களில் கல்விகற்க ஆஸ்திரேலிய அரசிய லார் சில ஏற்பாடுகளைச் செய்துள்ளனர் என்று

சிட்னிப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் என்னிடம் தெரிவித்தார்.

ஆஸ்திரேலியாவின் தலைநகரான கான்பராவில் **தேசியப் பல்கலைக் கழகம்** ஒன்று இருக்கின்றது. இது ஆஸ்திரேலியாவின் பண்பாட்டை வளர்க்கவும், பட்டம் பெற்றவர் ஆராய்ச்சியில் ஈடுபடவும் துணை செய்கின்றது. கான்பராவில் உள்ள மக்கள் தொகை ஏறத்தாழ 17,000 ஆகும். இங்ஙனம் இருந்தும், அங்கு ஒரு பல்கலைக் கழகம் ஏற்பட்டிருத்தல், அம் மக்கள் கல்வியில் கொண்ட ஆர்வத்தினை நன்கு உணர்த்துவதாகும் அன்றோ?

## கல்வி நிலை

ஆஸ்திரேலியாவில் இன்று ஏறத்தாழ 15,000 தொடக்கநிலைப் பள்ளிகள் இருக்கின்றன. அரை நாட் பள்ளிகள், பிரயாணப் பள்ளிகள் (ஒரே ஆசிரியர் பல ஊர்களுக்கும் சென்று பள்ளிகள் வைத்துப் பாடம் கற்பித்தல்) என்னும் பலவகைப் பள்ளிகள் ஆஸ்திரேலியாவில் கல்விப் பணி ஆற்றுகின்றன. பெரிய நூல்நிலையங்கள் கல்வியைப் பரப்பி வருகின்றன. உயர்நிலைப் பள்ளிகள் மிகச் சிறந்த முறையில் அமைக்கப்பட்டுள்ளன. ஆசிரியப் பயிற்சிப் பள்ளிகளும் ஏற்படுத்தப் பெற்றுள்ளன. எளிய மாணவர்க்கு அரசாங்கம் பொருளுதவி செய்து வருகிறது. சிறந்த முறையில் அமைந்த பொருட் காட்சி சாலைகள், நூல்நிலையங்கள், நுண் கலைக் காட்சிகள் முதலியவை பெரிய நகரங்களில் அமைந்துள்ளன. கல்விக்காக ஆஸ்திரேலிய அரசாங்கம் ஆண்டுதோறும் ஏறக்குறைய ஒரு கோடி இருபது லட்சம் பவுன் செலவு செய்கின்றது என்பது குறிப்பிடத்தக்கது. பள்ளி மாணவர்

களுக்கு உணவு வசதிகளும், சுகாதார வசதிகளும் இலவசமாக அளிக்கப் படுகின்றன.

## ஆஸ்திரேலிய மொழிகள்

ஆஸ்திரேலியா முழுவதிலுமுள்ள பழங் குடிகள் பலதிறப்பட்டவர்; ஆதலால் அவர்கள் பேசும் மொழிகளும் பலதிறப் பட்டனவாக இருக்கின்றன. அவற்றை வடபகுதி மொழிகள் என்றும், தென்பகுதி மொழிகள் என்றும் இரண்டு வகையாகப் பிரிக்க லாம். இவ்விருவகை மொழிகளும் ஏறத்தாழ முப்ப துக்கு மேற்பட்டுள்ளன. இவற்றுள் சில பழங்குடி களுள் கறுப்பு நிறத்தவர் பேசுவனவாகும்; சில செந்நிறத்தவர் பேசுவனவாகும்; வேறு சில பழுப்பு நிறத்தவர் பேசுவன. இப்பழங்குடி மக்களின் மொழிகளை ஆஸ்திரேலியரும், ஆஸ்திரேலியாவுக்குச் சென்ற பாதிரிமாரும் நன்கு ஆராய்ந்து நூல்களை எழுதியுள்ளனர். அவருள் ஹென்றி கெய்ல்ஸ் டர்னர், பி. ஆர். ஒய்ஸ், ஆர். எல். ஜாக்ஸ், ஆர். சி. மில்ஸ், பேராசிரியர் எர்னஸ்ட் ஸ்காட், ஜி. அர்னல்ட் உட்ஸ், டாக்டர் ஹோவிட், ஈ. எம். கர், எ. ஆர். வாலஸ், ஜி. டி. பெட்டானி, பி. ஸ்பென்சர், எப். ஜே. கில்லன் என்பவர் குறிப்பிடத் தக்கவர்.

## இலக்கியம்

ஆங்கிலேயக் குடியேற்றத்திற்கு முற்பட்ட கால இலக்கியம் ஆஸ்திரேலியாவில் இல்லை. ஆங்கிலேயர் குடியேறிய பிறகும், அவர்கள் நகரங்களை அமைத்து வளமுற வாழத் தொடங்கியதற்குப் பின்னருமே இலக்கியம் தோற்றமெடுத்தது. புதிய கண்டம் காணும் வேட்கையில் மக்கள் முனைந்திருந்ததாலும்

பழங்குடிகளைப் பற்றிய விவரங்களை அறியவேண்டிய தேவை ஏற்பட்டதாலும் ஆஸ்திரேலியாவின் இயற்கை அமைப்பையும் பழங்குடிகளின் வரலாறுகளையும் மொழிகளையும் பற்றிய நூல்களே ஆஸ்திரேலியாவில் முதலில் வெளியிடப்பட்டன. வில்லியம் சார்லஸ் வென்ட்வொர்த் என்பவர் 1819-இல் புதிய தென்வேல்ஸ் பற்றிய பல விவரங்கள் அடங்கிய நூலை வரைந்தார். எட்வர்ட் கிப்பன் வேக்பீல்ட் (Edward Gibbon Wakefield) என்பவர் "சிட்னியிலிருந்து கடிதங்கள்" என்னும் ஒரு நூலை 1829-இல் வெளியிட்டார். அவரே 1834-இல் தென் ஆஸ்திரேலிய மாகாணம் பற்றிய நூல் ஒன்றை வெளிப்படுத்தினார். அதே ஆண்டில் ஜான் டன்மூர் லாங்கு (Jhon Dunmoor lang) என்பவர் புதிய தென் வேல்ஸ் பற்றிய நூல் ஒன்றை வெளியிட்டார். ஜார்ஜ் வில்லியம் ரஸ்டன் என்பவர் 1883-இல் 'ஆஸ்திரேலிய வரலாறு' 'நியூஜிலாந்து' என்னும் இரண்டு நூல்களை வெளிப்படுத்தினர். இவ்வாறே **செய்யுள் நூல்களை** இயற்றிய புலவரும் பலராவர்.

மார்க்கஸ் கிளார்க், ஹென்றி கிங்ஸ்லி என்பவர்கள் நாவலாசிரியருள் குறிப்பிடத்தக்கவர். ஜார்ஜ் லூயி பெக், ஹென்றி லாசன், பார்பரா பைய்ண்டன் (Barbara Baynton), திருமதி ஏனியஸ் கன் (Mrs. Aeneas Gunn), முதலியோர் **சிறு கதை நூல்கள்** எழுதிய ஆசிரியராவர். **இலக்கிய ஆய்வு** என்னும் துறையில் A. T. ஸ்டிராங்கு (A. T. Strong), T. G. டக்கர் (T. G. Tucker) என்பவர் பாராட்டத்தக்க ஆசிரியராவர். இந்நூல்களுள் சில பிரெஞ்சு, ரஷ்ய மொழிகளிலும் வெளியாகியுள்ளன.

# 6. போக்குவரவு

## போக்குவரவுக்கேற்ற சமவெளி

உலகில் கானடா நாட்டிற்கு அடுத்தபடியாக ஆஸ்திரேலியாவில் நீண்ட இரயில் பாதை அமைந் திருக்கிறது. இரயில் போக்கு வரவுச் சாதனங்களுடன், மோட்டாரும், வானவூர்தியும், மின்சார வண்டிகளும் ஆங்காங்கே ஓடிக்கொண்டிருக்கின்றன. ஆஸ்திரேலியா சமவெளியாகப் பரந்துள்ளமை போக்கு வரவுக்கு ஏற்றதாக இருக்கின்றது. இயற்கைச் சமவெளி போலவே இயற்கைத் துறைமுகங்கள் கடற்கரையில் ஒன்ருெடொன்று இணைந்தனவாக இடம்பெற்றுள்ளன. ஆகவே, ஒரு துறையினின்று மற்ருெரு துறைக்கு எளிதாகப் போக்குவரவை உண்டாக்க வசதி இருக்கின்றது. மெல்பர்ன், சிட்னி, பிரிஸ்பேன் ஆகிய நகரங்களை இணைக்கும் சங்கிலித்தொடர் போன்ற நேரானவழி எக்காலத்தும் இன்பச் செலவைக் கொடுக்கவல்லது. நேரான பெருவழியுடன் இணைகின்ற கிளை நெறிகளும் குறுக்கு வழிகளும் ஆங்காங்கே பெருநகரங்களை இணைக்கின்றன. அவை சிற்றூர்ப் பகுதிகளையும், மேய்ச்சல் பண்ணைகளையும் நகர வாழ்வுடன் சேர்க்கின்றன. ஆஸ்திரேலியாவில் நேரான பெருவழிகள் நடு அரசினர் ஆணையின் கீழும், கிளைவழிகளும் குறுக்கு வழிகளும் அந்தந்த மாகாண அரசினர் ஆணையின் கீழும் அமைந்திருக்கின்றன. இன்னும் சில ஆண்டுகளுள் எல்லா மார்க்கங்களையும் நடு அரசினர் தாமே எடுத்து நடத்தத் திட்டமிட்டுள்ளனர். மாகாண அரசினரிடையே நிகழ்ந்த சில

ஒப்பந்தங்களின்படி மோட்டார்களும் வானவூர்தி களும் இப்போது பல அரசுகளை ஒருங்கே இணையச் செய்கின்றன.

## நடை வழிகள்

ஆஸ்திரேலியாவில் நடைவழிகளில் சுமைகளைத் தாங்கிச் செல்கின்ற எருமைகளையும், குதிரைகளை யும், கழுதைகளையும், ஒட்டகங்களையும் நாம் பார்க் கிறோம். நாட்டு வண்டிகள் சுமைகளை ஏற்றி ஆறு களைக் கடந்து செல்கின்றன. உழவருடைய பண்ணை களில் வண்டிப் பாதைகள் போதிய வளர்ச்சியுறாத நிலையைக் கண்ட ஆஸ்திரேலிய அரசாங்கம் மோட்டார்களையும், லாரிகளையும் அப்பண்ணை களுக்கு அனுப்பிப் பாதைகளைச் செப்பனிட் டுள்ளது. கம்பள வாணிகம், மருந்து வாணிகம், அஞ்சல் போக்குவரவு முதலியன மோட்டார் மூலமே நடைபெறுகின்றன. இதனால் ஆஸ்திரேலியாவில் மோட்டார் வைத்திருப்போர் எண்ணிக்கை மிகப் பெருகியுள்ளது. ஏறத்தாழ நான்கு பேருக்கு ஒருவர் இன்று ஆஸ்திரேலியாவில் மோட்டார் வைத்திருக் கின்றனர்; அங்கு ஏறக்குறைய நான்கு லட்சம் லாரி களும் பஸ்களும் இருக்கின்றன.

## ஆற்று வழிகள்

மர்ரே (Murray) டார்லிங்கு (Darling) ஆற்றுத் திட்டத்தால் ஏறக்குறைய நாலாயிரத்து இருநூறு மைல்கள் ஆற்றிலேயே சென்றுவரலாம். மர்ரே என் னும் ஆறு ஆண்டொன்றில் ஏழு திங்கள் கடந்து செல்வதற்கு ஏற்றது; டார்லிங்கு ஆற்றில் இடை யிடையே தடைகள் நேர்வதுண்டு. மர்ரே ஆற்றங் கரையில் அமைந்துள்ள 'ஆல்பரி' (Albury) நகரமே

ஆற்றுவழிச் செலவுக்குத் தலையாய இடமாகும்; டார் லிங்கு ஆற்றங்கரையில் அமைந்துள்ள வால்கெட் நகரம்(Walgett)அடுத்துச் சிறப்புக்குரியது. ஆற்று வழிச்செலவில் மேய்ச்சல் பண்ணைப் பொருள் களான கம்பளம், இறைச்சி, பால் முதலியனவும், உழவுப் பண்ணைப் பொருள்களான கோதுமையும், புல்லும், பழங்களும் அனுப்பப்படுகின்றன. அதற் குப் பயன்படுகின்ற நீராவிப் படகுகள் தட்டையான அடித்தளமுடையன ; இரட்டை முகங்களுடன் அழ காகத் தோன்றுகின்றன. மர்ரே டார்லிங்கு ஆற்றுத் திட்டம் போலவே, விக்டோரியா, டாலி (Daly) ரோபர் (Roper) ஆகிய ஆறுகளும் வழிச் செலவுக் கும், வாணிகச் செலவுக்கும் மிக்க பயனளிக் கின்றன.

## இரயில் பாதை

கி. பி. 1939-இல் எடுத்த கணக்கின்படி ஆஸ்தி ரேலியாவில் இரயில் பாதையின் முழு நீளம் ஏறத் தாழ முப்பதாயிரம் மைல் ஆகும். இத்துடன் மூவா யிரம் மைல் நீளமுள்ள இரயில் பாதை தனியுடைமை யாளர் சிலரால் கண்காணிக்கப் பெறுகின்றது. நடு அரசினர் பாதுகாப்பிலும், மாகாண அரசினர் பாது காப்பிலும் இரயில் போக்கு வரவு நடைபெற்று வருகின்றது.

இரயில் போக்கு வரவின் அமைப்பு ஆங்கில நாட்டின் கடன் தொகையைக் கொண்டு செய்யப் பட்டது. அதனால் விளைந்த வட்டித் தொகை பெருகியதால்,ஆஸ்திரேலியாவின் மூலதனம் குறைந் தது. தொடக்கத்தில் முதலையும் இழக்கக்கூடிய நிலை வந்தது. ஆயினும் பின்னர்ப் படிப்படியாக ஆஸ்தி ரேலியா போக்கு வரவைச் சீர்ப்படுத்தி, மூலதனத்

தைப் பெருக்கிக் கொண்டது. அதன் பயனுக, இன்று இரயில் தொழிலாளர் நிறைந்த ஊதியம் பெறுகின்றனர். ஆங்காங்கே புதிய கிளைப் பாதைகளை ஆட்சியாளர் தொடங்குகின்றனர்; வருவாய் தேடித்தரும் கருவியாகவே இரயில் போக்கு வரவு இன்று காணப்படுகிறது.

ஆஸ்திரேலியக் கண்டத்தின் உட்பகுதிகளை இணைக்கவல்ல நீண்ட இரயில் பாதைகளுள் 'டிரான்ஸ் ஆஸ்திரேலியன்', 'சென்ட்ரல் ஆஸ்திரேலியா', 'பெடரல் காபிடல் டெரிடரி' (Federal Capital Territory), 'நார்த் ஆஸ்திரேலியா' என்பவை மிகச் சிறந்தன. இவையல்லாமல் ஆஸ்திரேலியாவின் மாகாண அரசினரின் இரயில் பாதைகளும் அமைக்கப்பட்டுள்ளன. மேலும் பல கிளைப் பாதைகளை அமைக்கும் திட்டங்கள் அரசாங்கத்தினிடம் இருந்து வருகின்றன.

## வானவூர்தி

உள்நாட்டு வானவூர்திவழி அமைப்புக்குழுவின் ஆராய்ச்சியாலும் முயற்சியாலும் ஏறக்குறைய நாற்பத்தெட்டாயிரம் மைல் நீளமுள்ள வானவழியும், இருநூற்று ஐம்பத்தாறு வானவூர்தி நிலையங்களும் ஆஸ்திரேலியாவில் அமைக்கப்பட்டிருக்கின்றன. இம்முறையால் எல்லாப் பெருநகரங்களும் மிகச் சிறந்த முறையில் வானவழிகளால் இணைந்துள்ளன. புதிய கினியா, பிரிட்டன் ஆகிய நாடுகளுடன் வானவூர்திப் போக்குவரவும் இப்போது நடந்துவருகிறது. கி. பி. 1938-இல் நிகழ்ந்த அரசியற் சட்டத்தின்படி 'பறக்கும் படகுகள்' (Flying Boats) இலண்டன் முதலிய வெளிநாட்டு நகரங்கட்கும் ஆஸ்திரேலிய நகரங்கட்கும் பறக்கத்

தொடங்கின. இவை இன்றளவும் வெளிநாட்டு அஞ்சல் போக்குவரவை ஒழுங்காக நடத்துகின்றன.

## வானவூர்தியில் அஞ்சல்

ஆஸ்திரேலியாவில் உள்நாட்டு அஞ்சல் நிலையங்கள் நெடுந்தொலைவிலுள்ள இடங்களுக்குக் கடிதங்களை அனுப்புகின்றன. இவை பெரும்பாலும் இரயில்கள் மூலமே நடைபெறுகின்றன. இவையன்றி, வானவூர்திகளிலும் அஞ்சல் செல்லுகின்றது. ஆஸ்திரேலியாவைச் சுற்றியுள்ள தீவுகளுக்கு அஞ்சல் எடுத்துச்செல்ல வானவூர்திகளே பெரிதும் பயன்படுகின்றன. ஆஸ்திரேலிய வானவூர்திகள் வட அமெரிக்காவுக்கும் ஐரோப்பாவில் பல இடங்கட்கும் சென்று திரும்புகின்றன.

ஆஸ்திரேலியாவின் துறைமுகங்களில் தொலைவிற் பேசுங்கருவி, கம்பியில்லாத் தந்தி முதலியன அடங்கிய அஞ்சல் நிலையங்கள் உள்ளன. தந்திச் செய்திப் பரப்புக்காகப் பல கம்பிகள் கடலடியில் அமைந்துள்ளன. இவ்வஞ்சல் நிலையங்களினின்று வானவூர்தி வழியாக வெளிநாட்டுச் செய்திகள் இரவும் பகலும் செல்லுகின்றன.

## கப்பல்

ஆஸ்திரேலியாவில் வாணிகத் துறைக்கும் போக்குவரவுக்கும் கப்பல்கள் பெரிதும் உதவுகின்றன. வெளிநாடுகட்குச் செல்லும் கப்பல்கள் வேருகவும், உள்நாட்டுக் கப்பல்கள் வேருகவும் இருக்கின்றன. உள்நாட்டுக் கப்பல்கள் வெளிநாடுகட்குச் செல்லமாட்டா; வெளிநாடுகட்குச் செல்

பவை உள்நாட்டில் செல்லா. ஆஸ்திரேலியாவுக்கும் பிரான்சு, ஹாலந்து, பிரிட்டன், அமெரிக்கா முதலிய நாடுகட்கும் நடக்கும் ஏற்றுமதி வாணிகம் கப்பல்கள் மூலமே நடைபெறுகின்றன. இக்கப்பல்கள் பிரயாணிகளை ஏற்றுவனவும், தபால் கொண்டு செல்வனவும், சரக்குகளைக் கொண்டுபோவனவும் என்று மூவகைப் படும். இவை மூன்ருலும் ஆஸ்திரேலிய அரசாங்கத்திற்கு நிறைந்த வருவாய் உண்டெனக் கூறுதல் மிகையன்று.

# 7. தொழிலும் வாணிகமும்–I

## மேய்ச்சல் தொழில்

ஆஸ்திரேலியாவில் மேய்ச்சல் தொழில் வரலாற்றுச் சிறப்புடையது ; பொருளியல் அடிப்படையிலும் பெருமை வாய்ந்தது. நாட்டு வருவாயில் நூற்றுக்கு முப்பத்தெட்டுப் பங்குள்ள வருவாய், மேய்ச்சல் தொழிலைச் சார்ந்த பாற்பண்ணை முதலிய தொழில்களால் கிடைக்கிறது. இயந்திரத்தொழிலால் கிடைக்கும் வருவாய் நூற்றுக்கு இருபத்துமூன்று பங்கே உள்ளது. இதிலிருந்து மேய்ச்சல் தொழிலால் ஆஸ்திரேலியா அடைந்துவருகின்ற மிக்க வருவாயும் பொருள்வளமும் புலனுகின்றன அல்லவா? அங்கு ஏறத்தாழ 12 கோடி செம்மறி ஆடுகள், பிற கால் நடைகள் ஒன்றரைக்கோடி, 15 லட்சம் குதிரைகள், 18 லட்சம் பன்றிகள் இருக்கின்றன.

கி. பி. 1927 முதல் கி. பி. 1937 வரையுள்ள பத்தாண்டுகளில் வெளிநாட்டு ஏற்றுமதிப் பொருள்களின் சராசரி மதிப்பு ஆறுகோடி பத்து இலட்சம் பவுனுகும். இதில் நூற்றுக்கு அறுபது பங்குள்ள ஏற்றுமதிப் பொருள் மதிப்பு பாற்பண்ணைத் தொழிலால் கிடைத்தது. உழவுத்தொழிலின் பயனுகப் பயிராகின்ற உணவுப்பொருள்களின் ஏற்றுமதி மதிப்பு நூற்றுக்கு இருபத்து நான்கு பங்கே உள்ளது. இதனுல் வெளிநாட்டு ஏற்றுமதியில் பாற்பண்ணைத்தொழிலே முதலிடம் பெறுகின்றது என்றும், உழவுத்தொழில் அதற்கடுத்த இடம் பெறுகின்றது என்றும் அதிகாரிகள் என்னிடம் கூறினர்.

மேய்ச்சல் தொழிலுக்கு ஏற்ற தட்ப வெப்பம் ஆஸ்திரேலியாவில் பொருந்தியுள்ளது. அத்தட்ப

வெப்பம் பொருள்களை ஓரிடத்தில் சேர்த்துவைப் பதற்கும் ஏற்றதாக அமைந்திருக்கிறது. ஆங்காங்கே வேறுபடுகின்ற பலவகையான தட்பவெப்பச் சூழ் நிலை மாடுகளை மேய்த்தற்குத் தக்கவாறும், ஆடுகளை மேய்த்தற்குப் பொருந்துமாறும் இருக்கின்றது. சிற்சில காலங்களில் மழையே பெய்யாமையால் நீரற்ற வறட்சி தோன்றுகின்றது. இவ்வறட்சி ஐந்தாண்டுகட்கு ஒரு முறையாதல் நான்காண்டு கட்கு ஒருமுறையாதல் ஏற்படுகின்றது. டார்லிங்கு (Darling) பகுதியில் ஓராண்டுக்காலம் நீடித்த தண்ணீர்ப்பஞ்சத்தில் 276,000 ஆடுகளில் 90,000 ஆடுகள் உயிரிழந்தன. குவீன்ஸ்லாந்தில் ஈராண்டுக் காலம் நீடித்த தண்ணீர்ப் பஞ்சத்தில் எண்பது லட்சம் ஆடுகளும் இருபது லட்சம் மாடுகளும் இறந்தன. இத்தகைய பஞ்சத்தை ஆஸ்திரேலிய மக்கள் பலவழிகளைக்கொண்டு நீக்க முயல்கின்றனர்; தண்ணீரைத் தேக்கிவைத்தும், ஆடுமாடுகளுக்கு வேண்டிய வைக்கோல் முதலியவற்றைச் சேர்த்து வைத்தும், போக்குவரவு முறைகளைப் பெருக்கியும், வறுமை நிலவிய இடங்களுக்கு வேண்டிய உணவை அனுப்பிவைத்தும், அளவுக்கு மிஞ்சிய பொருள்கள் விளையும் காலங்களில் தேவைக்கு மேற்பட்டவற்றைச் சேர்த்துவைத்தும் பஞ்சக்கொடுமையைப் போக்கு கின்றனர்.

நீரற்ற வறட்சியால் புல்வெளிகள் விளைவதில்லை; நீர் நிறைந்த காலத்தும் ஆஸ்திரேலியாவில் புற் பூண்டுகளை முயல்கள் தின்றுவிடுகின்றன. ஆடு மாடுகளுக்கு வேண்டிய புல்லும் பிற பயிர்களும் அழிக்கப்படுவதால் அவை வருந்துகின்றன ; வேண் டிய அளவு பால் கொடுப்பதில்லை. ஆஸ்திரேலியர் முயல்கள் செய்யும் இன்னலினின்று மேய்ச்சல்

நிலங்களைக் காக்கும் பொருட்டு வேலியடைக்கின்றனர்; பொறிகள் இட்டு முயல்களைப் பிடிக்கின்றனர்; நச்சுப்பொருளைப் படைத்துவைத்து முயல்களை அழிக்கின்றனர்; அவ்வாறு பிடித்த முயல்களின் உடல்களைப் பதமாக்கி வெளி நாடுகளுக்கு ஏற்றுமதியாக்குகின்றனர்.

ஆஸ்திரேலியா சமவெளி நிறைந்திருப்பதால் மேய்ச்சல் தொழிலுக்குப் பொருத்தமாக உள்ளது. சமவெளிகளில் ஆடு மாடுகள் கூடி உலாவுகின்றன; போக்குவரவு முறைகள் எளிதாக அமைகின்றன. வட ஆஸ்திரேலியாவில் கால்நடைகளை மேய்ப்போர் நூற்றுக்கணக்கான மைல் தொலைவிற்கு ஆடு மாடுகளை மேய்க்கும் வாய்ப்புப் பெற்றுள்ளனர். கடற்கரையை ஒட்டிய மண்மேடுகளில் மேய்ச்சல் தொழில் மிகுந்த பயனைத் தருவதில்லை. எனினும், மேய்ச்சல் தொழில் ஆஸ்திரேலியாவில் படிப்படியாக வளர்ச்சிபெற்று வருகின்றது. மிகப் பரந்த புல்வெளி நிலங்கள் வேலி அடைக்கப் பெருமல் ஆஸ்திரேலியாவில் விளங்குவதால் பாற்பண்ணை செழிப்புற்றுத் திகழ்கின்றது. மேலும், ஆடு மாடுகள் செல்வங்களாக அமைந்திருப்பதோடு குதிரைகளும் ஆஸ்திரேலியாவுக்குச் செல்வமாக அமைந்துள்ளன; ஆஸ்திரேலியக் குதிரை குளிர், வெப்பக் காலங்களில் மேய்ச்சல் நிலங்களைச் சுற்றிவரப் பயன்படுகின்றது; குதிரைகள் வெளி நாடுகளுக்கும் ஏற்றுமதியாகின்றன.

## கம்பள ஆடுகள்

ஆஸ்திரேலியச் செல்வங்களுள் ஆடுகளே மிகச் சிறந்தவை. உலகெங்குமுள்ள ஆடுகளுள் ஆறில்ஒரு பங்கினை ஆஸ்திரேலியா பெற்றிருப்பது குறிப்பிடத்

தக்கது. உலகிற் கிடைக்கும் கம்பளத்தில் நாலில் ஒரு பங்குள்ள கம்பளம் ஆஸ்திரேலியக் கம்பள மாகும். பொதுவாக ஆடுகளுக்கு ஐம்பத்தைந்து முதல் அறுபத்தெட்டு வரையுள்ள டிகிரி வெப்பநிலை வேண்டும்; ஆண்டுக்கு இருபது முதல் முப்பது அங்குல மழை வேண்டும். இந்த வெப்பநிலையும் மழையும் ஆஸ்திரேலியாவில் நிறைவெய்தியிருப்ப தால், ஆடு மேய்த்தல் இங்குச் சிறப்பாக நடந்து வரு கின்றது. கலப்பு முறையில் ஆட்டினவளர்ச்சியை ஆஸ்திரேலியர் பெருக்கிக் கொள்கின்றனர். கலப்பு ஆட்டினத்தின் கம்பளம் மிகவும் உயர்ந்ததாகக் கருதப்படுகின்றது. உலகெங்கும் இக்கம்பளத்தை ஏற்றுமதி செய்து ஆஸ்திரேலியர் நிறைந்த செல்வம் திரட்டுகின்றனர். எல்லா நாடுகளிலும் ஆஸ்தி ரேலியக் கம்பளத்திற்குப் பெரு மதிப்பு ஏற்பட் டுள்ளது.

ஆடுகளின் மயிர்களைந்து, தோல் உரித்துப் பதமாக்கிக் கம்பளங்களைக் கட்டுகளாகக் கட்டி ஒட்டகங்களின்மேல் ஏற்றி வெளி நாடுகளுக்கு அனுப்புதல் ஆஸ்திரேலியர் வழக்கமாகும். ஒட்டகங் களுக்குப் பதிலாக மோட்டார்களும் இக்காலங்களில் மிகுதியும் பயன்படுகின்றன. கம்பள ஆலைகள் கி. பி. 1921-இல் ஐம்பது இருந்தன; கி. பி. 1939-இல் மேலும் நாற்பது ஆலைகள் புதியனவாகத் தோன் றின. கம்பள ஏற்றுமதியால் ஆஸ்திரேலியாவுக்கு கி. பி. 1940-இல் ஒரு கோடி ஐம்பத்தெட்டு லட்சம் பவுன் வருவாய் கிடைத்ததாம். அவ்வருவாய் இப் போது படிப்படியாகப் பெருகிவருகின்றது என்பதை அரசாங்கப் புள்ளிவிவரங்கள் உணர்த்துகின்றன.

இன்று ஆஸ்திரேலியாவினின்று இந்தியாவுக்கு இருபது கோடி ரூபாய் மதிப்புள்ள உணவு ஏற்று

மதிப் பொருள்கள் ஆண்டுதோறும் வருகின்றன. அவற்றுள் ஆட்டுப்பண்ணைத் தொழிற்பொருள்கள் ஒரு பகுதியாகும். பண்ணை ஆடுகளும் ஆஸ்திரேலியச் செல்வங்களுள் ஒன்ருகும். நான் ஒரு ஆட்டுச் சந்தையைப் பார்வையிடப் போயிருந்தேன்; மிக்க உயர்தரச் செம்மறியாடுகளை வைத்திருந்த ஒருவரிடம் சென்று விலை கேட்டேன். ஒரு செம்மறியாட்டின் விலை ரூபாய் 2500 என்று அவர் என்னிடம் கூறினர். அது கேட்டதும் நான் அடைந்த வியப்பிற்கு அளவுண்டோ? ஒரு செம்மறியாடு தரும் கம்பள வருவாயையே அவர் அதன் விலையாகக் கூறினர் என்பது இங்கு அறியத் தக்கது.

## பண்ணை மாடுகள்

ஆடுகளைப் போலவே மாடுகளும் ஆஸ்திரேலியாவின் இயற்கைச் செல்வங்களாகும். வடக்கு ஆஸ்திரேலியாவிலும் மேற்கு ஆஸ்திரேலியாவிலும் காணப்படும் மேய்ச்சல் நிலங்கள் உலகில் மிகப் பெரியவை; இயற்கை வளமுடையவை. கறவை மாடுகள் ஆஸ்திரேலியாவின் கடற்கரைப் பகுதிகளில் நிறைந்துள்ளன; குவீன்ஸ்லாந்தின் தென் கிழக்கிலும், புதிய தென்வேல்ஸின் வடகிழக்கு, கிழக்குப் பகுதிகளிலும், விக்டோரியா, டாஸ்மேனியா ஆகிய மாநிலங்களிலும் அவை வளர்க்கப்படுகின்றன. வெண்ணெய், பனியின் உதவியால் உறையச் செய்து பதமாக்கிய புலால் ஆகிய இரண்டும் ஏற்று மதிப் பொருள்களாக அமெரிக்காவுக்கு அனுப்பப் படுகின்றன. புலாலைப் பதப்படுத்தி உறையச் செய்து புட்டிகளில் அடைக்கும் இயந்திரத் தொழில் ஆஸ்திரேலியாவில் சிறந்து விளங்குகிறது.

## பாற்பண்ணைத் தொழில்

பாற்பண்ணைத் தொழில் அண்மைக் காலங்களில் ஆஸ்திரேலியாவெங்கும் வளர்ச்சியடைந்துள்ளது என்று கூறலாம். ஆஸ்திரேலியாவின் பாற்பண்ணைப் பொருள்களுள் பெரும்பாலன விலையாகுமிடம் அமெரிக்காவேயாகும். ஆஸ்திரேலிய அரசாங்கம் மாடுகளை விஞ்ஞான முறையில் பாதுகாத்து வளர்ப்பதிலும், பால் கறப்பதிலும், வெளி நாடுகட்கு வெண்ணெய் முதலிய பண்ணைப் பொருள்களை ஏற்றுமதியாக்குவதிலும் மிக்க சிந்தனை செலுத்துகின்றது. மேலும் ஆஸ்திரேலியாவின் மாட்டுப் பண்ணைகளில் பன்றி, கோழி, தேனீ ஆகியவற்றின் வளர்ப்பு முறைகளும் நடந்து வருகின்றன. கி. பி. 1932 முதல் கி. பி. 1937 வரை ஐந்தாண்டுகளில் பாற்பண்ணைப் பொருள்களால் இரண்டு கோடி இருபத்தைந்து லட்சம் பவுன் மதிப்புள்ள பொருட்செல்வம் ஆஸ்திரேலியாவுக்குக் கிடைத்தது; இதில் தொண்ணூறு லட்சம் பவுன் மதிப்புள்ள பாற்பண்ணைப் பொருள்கள் வெளி நாடுகட்கு ஏற்றுமதியாயின. இன்று ஆஸ்திரேலியாவில் பாற்பண்ணைகளில் பால் கறக்கும் கருவிகளே பயன்படுகின்றன; கையால் பால் கறக்கும் முறையை அங்குக் காண முடியாது. பாலிலிருந்து கிளாக்சோ, ஓவல்டின் முதலிய பொருள்களைச் செய்யும் தொழிற்சாலைகள் பலவுள்ளன. மாட்டுப் பண்ணைகளில் கோழி வளர்ப்பும் நடைபெறுகிறது என்று முன்பு அறிந்தோமல்லவா? இன்று ஆஸ்திரேலியாவில் முட்டை விற்பனைத் தொழில் ஒரு சிறப்புமிக்க தொழிலாகும். முட்டை விற்பனைக் குழு ஒன்று அங்கு அமைக்கப்பட்டுள்ளது. முட்டையிலிருந்து வெள்ளை, மஞ்சள் கருவைப் பிரிக்கும் இயந்திரங்கள் ஆஸ்திரேலியா

வில் இருக்கின்றன. முட்டையிலுள்ள சத்துப் பொருள்களைப் பிரித்து எடுத்துப் பல புட்டிகளில் அடைத்து ஏற்றுமதி செய்கின்றனர்.

## உழவுத் தொழில்

உழவுத்தொழில், ஆஸ்திரேலியாவில் கம்பள ஆடு மேய்த்தல், பண்ணை மாடு மேய்த்தல் ஆகிய இரு தொழில்களுக்கும் அடுத்த மூன்ருவது தொழிலென்றே கூறல் வேண்டும். உழவைப்பற்றி அறிந்து கொள்ளுவதற்குக் கல்வித் திட்டமும், ஆராய்ச்சித் துறையும் உருவாக்கப்பட்டுள்ளன; மேலும், அரசாங்க உழவுப் பண்ணைகளும் உழவுத் தொழிலைப் பெருக்கி வருகின்றன.

பாஸ்பேட் உரங்கள் ஆஸ்திரேலியாவைச் சூழ்ந்துள்ள தீவுகளிலுள்ள பாறைகளினின்று எடுக்கப் படுகின்றன. பாஸ்பேட் உரங்களைப் பாறைகளி னின்று எடுக்கும் பொருட்டு ஆஸ்திரேலியாவில் ஏறக்குறைய நூறு ஆலைகள் தோன்றியுள்ளன. இவ்வுரங்களே கோதுமை, கிழங்கு முதலிய பயிர்களை வளமாக்கி, நிறைந்த விளைச்சல் கொடுக்கச் செய்கின்றன. ஆயினும், ஆண்டுதோறும் நிலத்தில் பாடுபட்டு உழைப்போர் எண்ணிக்கை இங்குக் குறைந்து வருகின்றது. நகரங்களில் சென்று பெரிய இயந்திரத் தொழிலை மேற்கொள்ளும் விருப்பமே ஆஸ்திரேலியரிடம் பரவுகின்றது. இதனால் உழவுத் தொழிலுக்கு எவ்வகைத் தீங்கும் உண்டாக வில்லை; அது முன்னைவிடப் பன்மடங்கு வளர்ச்சி அடைந்துள்ளது. மக்கள் தொகை சிற்றூர்ப்புறங் களில் குறைவதால் உழவில் முழுக்கருத்தையும், முழுமுயற்சியையும் ஆஸ்திரேலிய உழவர் பெருமக்கள் செலுத்திவருகின்றனர்.

ஆஸ்திரேலியர் வைக்கோல் தயாரிக்கும் முறை புதுமையானது. ஐரோப்பாவெங்கும் மக்கள் புற்பூண்டுகளைக் காயவைத்து வைக்கோலை எடுத்துக் குவிக்கின்றனர். ஆயின், ஆஸ்திரேலியாவில் மக்கள் கோதுமை, ஓட்ஸ் முதலிய பயிர்களை வளர்ந்து வரும் பருவத்தில் வெட்டிப் பசுந்தழைகளைக் காய வைத்து வைக்கோலைக் குவிக்கின்றனர். வறண்ட இயற்கைச் சூழலும், பருவம் மாறிப் பெய்யும் மழைத்தூறலும் இப்புது முறைக்குக் காரணங்களாகும். மழையில்லாக் கோடைகாலத்தில் ஆங்காங்கே பசும்புல் தலைகாட்டுவதுண்டு; அப்போது அதுவே மாடுகளுக்குத் தீனியாகப் பயன்படுகிறது.

இன்று ஆஸ்திரேலியாவினின்று இந்தியாவுக்கு இருபது கோடி ரூபாய் மதிப்புள்ள உணவுப் பொருள்கள் ஏற்றுமதியாகின்றன என்று முன்பே அறிந்தோமல்லவா? அவற்றுள் பெரும்பகுதி கோதுமைப் பொருள்களே ஆகும். ஆஸ்திரேலிய உழவுப் பண்ணைகளில் பலவகை இயந்திரங்கள் பயன்பட்டு வருகின்றன. நிலத்தைப் பண்படுத்துவதற்கும், விதை விதைப்பதற்கும், உரம் தூவுதற்கும், நீர் பாய்ச்சுதற்கும், பயிர் அறுவடைக்கும் இயந்திரங்களே உதவுகின்றன.

ஆஸ்திரேலியாவில் உள்ள உயர்நிலைப் பள்ளிகளில் உழவு ஒரு பாடமாகக் கற்பிக்கப்படுகின்றது. இயந்திரக்கலப்பை கொண்டு உழும் முறையைப் பள்ளியாசிரியர்கள் மாணவர்களுக்குக் கற்பிக்கின்றனர். உயர்நிலைப் பள்ளியில் உழவைப்பற்றி அறிந்த மாணவர்கள் உழவுக் கல்லூரிகளில் சேர்கின்றனர். அங்குப் புதிய விஞ்ஞான முறைப்படியே உழவு முறைகள் கற்பிக்கப்படுகின்றன.

## ஆஸ்திரேலியப் பயிர் வகைகள்

ஆஸ்திரேலியாவில் நன்ருக வளரும் பயிர் கோதுமை யாகும். புதிய தென் வேல்ஸ், விக்டோரியா, தென் ஆஸ்திரேலியா, மேற்கு ஆஸ்திரேலியா ஆகிய மாநிலங்களில் கோதுமை சிறந்த முறையில் பயிராகின்றது. தென் ஆஸ்திரேலியாவில் அடிலேட்டின் அருகேயும் புதிய தென் வேல்ஸில் 'டூப்போ'விலிருந்து 'ஆல்புரி'வரையுள்ள நூறு கல் தொலைவிலும் கோதுமை மிகப் பேரளவில் வளர்ந்து பயனளிக்கிறது. பற்பல கோதுமைப் பண்ணைகளின் உழைப்பினுல் நிலம் பண்படுத்தப்பட்டு, பாஸ்பேட் உரம் தூவப்பெற்றுக் கோதுமை பயிராக்கப்படுகின்றது. உழவு முறையும், போக்குவரவு முறையும் படிப்படியாகச் சீர்திருந்துவதால், ஆஸ்திரேலிய மக்கள் உயரிய முறையில் கோதுமையைப் பயிராக்கி அறுவடை செய்து மகிழ்கின்றனர். ஐந்து லட்சம் மைல் சுற்றளவுள்ள கோதுமை விளைநிலங்கள் ஆஸ்திரேலியாவில் இன்று இருக்கின்றன.

ஓட்ஸ் என்னும் பயிர் மாடுகளுக்கு நல்ல உணவாகப் பயன்பட வல்லது. விக்டோரியா மாநிலமே ஓட்ஸ் பயிரைப் பயிரிட்டு விளைவு செய்வதில் பெருமை பெற்றுள்ளது. பார்லி என்னும் பயிரும் தென் ஆஸ்திரேலியாவிலும், விக்டோரியாவிலும் மிக்க அளவிற் பயிராகின்றது. ஆஸ்திரேலியர் பார்லியை வெளிநாடுகட்கு ஏற்றுமதி செய்து, அதன் உற்பத்தியைப் பெருக்குகின்றனர். மைஜீ என்னும் மற்றெருவகைப் பயிர் பிரிஸ்பேன் மாநிலத்தின் தென் கடற்கரையில் விளைகின்றது. மேலும் ஆஸ்திரேலியாவில் நெற்பயிரும் சாகுபடியாகின்றது. நெல் விதைத்துப் பயிராக்கும் தொழிலை ஆஸ்திரேலியர் வளர்ப்பதில் கண்ணுங் கருத்துமாக

இருக்கின்றனர். கிழங்கு வகைகளில் உருளைக் கிழங்கும், சர்க்கரை வள்ளிக்கிழங்கும் ஆஸ்திரேலியாவில் பயிராக்கப்படுகின்றன.

**கரும்பும், பருத்தியும்** வளமான மண்ணில் வளரக் கூடியன; மூடுபனியும் உறைபனியும் இல்லாத சூழலில், மிதமான தட்பவெப்பத்தில் பயிராவன; மேலும், விஞ்ஞான வளர்ப்பு முறைகளை வேண்டி நிற்பன; மிகுந்த உழைப்பையும் எதிர் பார்ப்பன. இத்தகைய கரும்பையும், பருத்தியையும் ஆஸ்திரேலிய மக்கள் தக்க முறைகளில் பயிராக்கி வளர்க்கின்றனர். கரும்பு ஆலைகளும், பருத்தி ஆலைகளும் எண்ணிறந்தவனவாய் ஆஸ்திரேலியாவில் தோன்றியுள்ளன. கரும்பு குவீன்ஸ்லாந்தின் கீழ்க்கரையிலும், பருத்தி புதிய தென் வேல்ஸின் கடற்கரைப் பகுதிகளிலும் விளைகின்றன. பருத்தி பயிரிடுவோர் குறைந்த நிலங்களை உடையவராய்ச் சிறு தொழிலாக மேற்கொண்டு உற்பத்தியைப் பெருக்கிவருகின்றனர். சர்க்கரைத் தொழில் ஆஸ்திரேலியாவின் சிறந்த தொழில்களில் ஒன்றாகும். சர்க்கரைத் தொழிற்சாலைகள் பல இன்று ஆஸ்திரேலிய மக்களுக்கு வெள்ளைச் சர்க்கரையைக் கொடுக்கின்றன. எஞ்சிய வெள்ளைச் சர்க்கரை வெளிநாடுகட்கு ஏற்றுமதியாகின்றது. கரும்பை அறுவடை செய்யும் இயந்திரக் கலப்பைக்கு ஆஸ்திரேலிய மொழியில் 'கின்னியர்' என்பது பெயர். அக்கலப்பை இருபுறமும் கரும்பை வெட்டிக் கட்டுக்களாகக் கட்டுகின்றது.

ஆஸ்திரேலியாவில் கிடைக்கும் **பழ வகைகளும்** பலவுள. அவற்றுள் கொடி முந்திரிப் பழமே மிக்க சிறப்புடையது. தென் ஆஸ்திரேலியாவிலும், விக்டோரியாவிலும் முந்திரிப்பழக் கொடிகள் மிகுதியாக

வளர்கின்றன. முந்திரிப்பழங்கள் வெளிநாடுகட்கு ஏற்றுமதி செய்யப்படும் அளவுக்கு, இவற்றின் வளர்ச்சி பெருகியுள்ளது. மேலும் ஆப்பிள், ஆரஞ்சு, எலுமிச்சை முதலிய பழங்களும் ஆஸ்திரேலியாவின் பல மாநிலங்களில் மிகுதியாகக் கிடைக்கின்றன; இவை இங்கிலாந்தில் மிகுதியாக விலையாகின்றன. ஆஸ்திரேலியாவில் பழங்களைப் பறிப்பதற்குக் கூலிகள் இருக்கின்றனர். இக்கூலித் தொழிலாளர் புலரிக்காலையில் விரைந்து எழுந்து பழங்களைப் பறிக்கின்றனர். இவர்கள் நாட்கூலி பெற்றே பிழைக்கின்றனர். ஆஸ்திரேலியர் பழங்களைக்கொண்டு 'ஜாம்' என்னும் இனிப்புப் பொருளைச் செய்துகொள்கின்றனர்.

## நீர்ப்பாசனம்

ஆஸ்திரேலிய ஆட்சியாளர் நீர்த்தேக்கத்திட்டங்கள் பலவற்றை நிறைவேற்றி வருகின்றனர். வீடுகளுக்கும் பண்ணைகளுக்கும் பயன்படுமாறு இத்திட்டங்கள் செயலாற்றுகின்றன. நீர்ப்பாசனத்தின் பெருக்கத்தால் ஆஸ்திரேலியாவில் நல்ல தட்பவெப்பமும், குளிர்ந்த மழைத்தூறலும் உண்டாகின்றன. குவீன்ஸ்லாந்திலுள்ள 'டாசன்' ஆற்றுப்பாசனம் குறிப்பிடக் தக்கது. 'பரின்சக்' என்னும் அணைக்கட்டு இருபதுமைல் சுற்றளவுடையது; அது பதினைந்து லட்சம் ஏக்கர் நிலங்களுக்கு நீர்பாய்ச்ச வல்லது. ஆல்பரிக்குப் பக்கமுள்ள 'கியூம்' என்பது கி. பி. 1936-ல் கட்டப்பட்ட பெரிய அணைக்கட்டாகும். இத்தகைய அணைக்கட்டுகளால் நீரைத்தேக்கி வயல்களுக்கு உரிய காலங்களில் நீர்ப்பாய்ச்சி, ஆஸ்திரேலியர் உழவுத் தொழிலை வளர்க்கின்றனர்.

# 8. தொழிலும் வாணிகமும்–II

## சுரங்கத் தொழில்

ஆஸ்திரேலியாவிற் கிடைக்கும் சுரங்கப் பொருள்கள் யாவை என்பது பற்றி, இயற்கை யமைப்பு என்னும் கட்டுரைப் பகுதியில் சிறிது அறிந்தோம். மேய்ச்சல் தொழில், உழவுத் தொழில் ஆகிய இரு தொழில்களாலும் நாட்டுச் செல்வம் பெருகுவது போலச் சுரங்கத் தொழிலால் பெருகுவ தில்லை. எனினும், பொன் தேடும் நோக்கத்துடனே பலர் ஆஸ்திரேலியாவுக்கு வந்து சேர்ந்தனர் என் பதை அதன் வரலாறு தெரிவிக்கின்றது. ஆஸ்தி ரேலியா இவ்வளவு முன்னேறியிருப்பதற்குக் கார ணமே பொன் தேடும் நோக்கமாகுமெனக் கூறுதல் மிகையன்று. கி. பி. 1931-ஆம் ஆண்டு வரை சுரங் கப் பொருள்கள் கண்டுபிடிக்கப்படவில்லை ; சிற்சில இடங்களில் தக்க கருவிகள் இன்மையால் வெட்டி யெடுக்கப்படவில்லை. அதன் பிறகு நீண்டகால முயற்சியின் பயனாகப் பல சுரங்கங்கள் வெட்டப் பட்டன. புதிய அறிவியல் முறையும், பொறியியல் திட்டமும் கைக்கொள்ளப்பட்டமையால், ஆஸ்தி ரேலிய மண்ணில் புதைந்து கிடக்கும் செல்வங்கள் வெளியே கொண்டுவரப்பட்டன. புதிய தென்வேல்ஸ் மாநிலமே சுரங்கத்தொழிலில் மிக்க பெருமையுற்று விளங்குகிறது. கி. பி. 1939-இல் ஒரு கோடி இரு பது லட்சம் பவுன் மதிப்புள்ள சுரங்கப் பொருள் களை அங்கு வெட்டியெடுத்தனர். இத்தொழில் பிற் பட்ட ஆண்டுகளில் வளர்பிறை போல வளர்ந்து வந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

## பொன் சுரங்கம்

கி. பி. 1903-இல் ஒருகோடி அறுபத்து மூன்று லட்சம் பவுன் மதிப்புள்ள பொன் ஆஸ்திரேலியா வில் கிடைத்தது. அதன் பிறகு முப்பது ஆண்டு களில் பொன் கிடைப்பது அருகியது. பின்னர்ப் பொன்னின் மதிப்பு உயர்ந்தவுடன் ஆஸ்திரேலியர் விலையுயர்ந்த பொன்னைச் சுரங்கத்தினின்று வெட்டி யெடுத்தனர். மேற்கு ஆஸ்திரேலியாவே பொற் சுரங்கங்கள் பலவற்றைப் பெற்றுள்ளது; அதனை யடுத்து, விக்டோரியாவும், மூன்றுவதாகக் குவீன்ஸ் லாந்தும் இடம் பெறுகின்றன. மேற்கு ஆஸ்திரேலி யாவிலும் விக்டோரியாவிலும் பொற்பாறைகளி னின்று பொன்னை வெட்டியெடுக்கின்றனர். புதிய தென் வேல்ஸில் கலப்புப் பொன்னே கிடைப்பதால் அதனை இரசாயன முறையில் கழுவித் தூய்மை செய்கின்றனர். உலகில் அமெரிக்கா, ரஷ்யா, கானடா, தென்னுப்பிரிக்கா ஆகிய நான்கு நாடு களே பொன் விளையும் இடங்களாகும். தென்னுப் பிரிக்காவை அடுத்த ஐந்தாம் நிலையில் நிற்பது ஆஸ்திரேலியா ஆகும். கி. பி. 1939-இல் 28,840 சுரங்கத் தொழிலாளர் ஆஸ்திரேலியச் சுரங்கங்களில் வேலை பார்த்தனர். இப்பொழுது ஏறத்தாழ முப்ப தாயிரம் தொழிலாளர் வேலை பார்க்கின்றனர்.

## வெள்ளியும் ஈயமும்

பெரும்பாலும் ஆஸ்திரேலியாவில் வெள்ளியும் ஈயமும் கலப்புற்ற உலோகமாகவே அகப்படுகிறது. புதிய தென்வேல்ஸில் இக்கலப்பு உலோகம் மிகுதி யாகக் கிடைக்கிறது. கி. பி. 1918-இல் ஆஸ்தி ரேலியாவின் வெள்ளியும் ஈயமும் உலகில் நூற்றுக்கு

ஆறுபங்கு இருந்தது என்று அரசாங்க அறிக்கை கூறுகிறது. புதிய தென் வேல்ஸிலுள்ள 'சிதைந்த குன்றம்' (Broken Hill) என்னும் இடத்திலும், குவீன்ஸ்லாந்திலுள்ள 'இசா மலையிலும்' (mount Isa) வெள்ளியும் ஈயமும் கலந்த கலப்பு உலோகம் மிகுதியாகக் காணப்படுகிறது. மேலும் டாஸ்மேனியாவிலுள்ள மாக்னெட் (Magnet), லைல் (Lyall), ஜீஹன் (Zeehan) முதலிய சுரங்கங்கள் வெள்ளி ஈயம் கலந்த உலோகங்களை உடையன. தென் ஆஸ்திரேலியாவில் உள்ள பிராங்கிலின் (Franklin) துறைமுகத்தருகிலும், ராபிட் (Rapid) விரிகுடாப் பகுதியிலும் இச்சுரங்கங்கள் காணப்படுகின்றன என்று அண்மையில் ஆராய்ச்சியாளர் கண்டுபிடித்துள்ளனர். டாஸ்மேனியாவின் சுரங்கங்கள் கி. பி. 1936-இல் இரண்டு லட்சம் பவுன் மதிப்புள்ள வெள்ளியும், ஈயமும் கலந்த உலோகத்தைக் கொடுத்தன என்று அரசியலார் புள்ளிக் கணக்கு வெளியிட்டுள்ளனர்.

## துத்தநாகம்

ஆஸ்திரேலியாவில் மிகுந்த துத்தநாகம் 'சிதைந்த குன்றத்தில்' கிடைக்கிறது. மேலும், அங்கு வெள்ளியும், ஈயமும் கலந்த உலோகப் பொருளை வெட்டியெடுத்துச் சில விஞ்ஞான முறைகளால் அதிலிருந்து துத்தநாகத்தைப் பிரித்தெடுக்கின்றனர். இசாமலைப் பகுதியிலும் துத்தநாகம் வெட்டியெடுக்கப்படுகிறது.

## தகரமும் செம்பும்

ஆஸ்திரேலியாவில் தகரம் பல உலோகங்களோடு கலப்புற்ற நிலையில் காணப்படுகிறது. புதிய

தென்வேல்ஸிலுள்ள 'டின்கா' (Tingha) பகுதியி லும், டாஸ்மேனியாவிலுள்ள பிஸ்காவ் (Bischoff) மலையிலும் தகரம் வெட்டியெடுக்கப்படுகிறது. ஆயி னும், அடிக்கடி உலகச் சந்தையில் தகரத்தின் விலை திடீரென்று ஏற்றமும் இறக்கமும் அடைவதால், ஆஸ்திரேலியாவில் கிடைக்கும் தகரம் சிறந்த மதிப் புப் பெற இயலவில்லை. டாஸ்மேனியாவிலுள்ள லைல் மலையில் செம்பு மிகுதியாக வெட்டியெடுக்கப்படு கிறது. தகரத்தைப் போலவே செம்பும் உலகச் சந் தையில் விலையுயர்ந்தும் விலை குறைந்தும் மாறி வரு வதால், ஆஸ்திரேலியர் பெருந்துன்பம் அடைகின் றனர்.

## இரும்பு

கி. பி. 1939-இல் நடந்த சுரங்கப் பொருள் ஆராய்ச்சியில் இரும்புப் பொருளும் இருப்பதாக ஆராய்ச்சியாளர் கண்டனர்; மேற்கு ஆஸ்திரேலியா விலுள்ள 'யாம்பி சவுண்ட்' (Yampi Sound) என் னும் இடத்தில் பத்துக்கோடி டன் இரும்பும், தென் ஆஸ்திரேலியாவிலுள்ள 'அயன் நாப்' (Iron knof) என்னுமிடத்தில் பதினைந்து கோடி டன் இரும்பும் இருப்பதாகக் கணக்கெடுத்தனர். கி. பி. 1938-இல் ஆஸ்திரேலிய அரசாங்கம் வெளிநாடுகட்கு இரும்பை ஏற்றுமதி செய்தல் கூடாது என்று சட்டம் இயற்றி யது. ஆஸ்திரேலியாவில் உள்ள இரும்பை உள்நாட் டிலே பயன்படுத்த வேண்டுமென்பதே இச்சட்டம் பிறப்பிக்கக் காரணமாகும். கி. பி. 1938-இல் அயன் நாப் என்னுமிடத்தில் ஆஸ்திரேலியாவில் நூற்றுக் குத் தொண்ணூற்றைந்து பங்கு இரும்பும், புதிய தென் வேல்ஸில் நாலாயிரத்து ஐந்நூறு டன் இரும் பும் வெட்டியெடுக்கப்பட்டன.

## பிற உயர்ந்த உலோகங்கள்

மேலும் ஆஸ்திரேலியாவில் விலையுயர்ந்த கற்கள் குறைந்த அளவில் அகப்படுகின்றன. 'டங்ஸ்டன்' (Tungsten) என்னும் உலோகம் ஆஸ்திரேலியாவின் அரிய பொருள்களுள் ஒன்ருகும். இக்காலத்தில் மின்சார விளக்குகளெல்லாம் டங்ஸ்டனின்றி ஒளி பெறுவதில்லையல்லவா? ஆஸ்திரேலியாவில் டங்ஸ்டன் புதைந்துள்ள இடங்களை வெட்டியெடுக்கும் முயற்சி இப்பொழுது தொடங்கப்பெற்றுள்ளது.

## நிலக்கரி

ஆஸ்திரேலியாவில் மூன்று வகையான நிலக்கரி கிடைக்கிறது. ஒருவகை நிலக்கரி புதிய தென்வேல்ஸில் மிகுதியாகவும், விக்டோரியாவிலும், குவீன்ஸ்லாந்திலும் சற்றுக் குறைவாகவும் காணப்படுகிறது. இரண்டாம் வகை நிலக்கரி விக்டோரியாவில் மிகுதியாகவும் பிற மாநிலங்களில் குறைவாகவும் கிடைக்கிறது. பழுப்பு நிலக்கரி என்னும் மற்ருெரு வகையும் விக்டோரியாவில் மிகுதியாகவும் பிற மாநிலங்களில் சிறிது குறைவாகவும் காணப்படுகிறது. இந்த நிலக்கரிச் சுரங்கங்கள் மக்கள் தொகை பெருகிய இடங்களில் மிக நெருக்கமாக அமைந்துள்ளன. நிலக்கரியுடன் இரும்பு முதலிய சில உலோகங்களும் கலந்து கிடைக்கின்றன. ஆஸ்திரேலியாவில் உலோகத் தொழில்களுக்கும், வீட்டு வாழ்க்கைக்கும் பயன்படும் நிலக்கரி போக, எஞ்சியுள்ள நிலக்கரி ஏற்றுமதி செய்யப்படுகிறது.

புதிய தென் வேல்ஸில் ஏறத்தாழப் பதினைந்தாயிரம் மைல் சுற்றளவுள்ள நிலப்பகுதியில் நிலக்கரி பரந்து கிடக்கிறது. இங்கு வடக்கும் தெற்கும் தென்

மேற்குமாக அமைந்துள்ள மூவகைச் சுரங்கங்களில் இரசாயன வாயுவைத் தயாரிக்கும் நிலக்கரியும், வீட்டு வாழ்க்கைக்குப் பயன்படும் நிலக்கரியும், நீராவி உண்டாக்கும் நிலக்கரியும் கிடைக்கின்றன. தென்மேற்கு பசிபிக் மாகடற்பகுதிக்கு ஏறக்குறைய இருபது லட்சம் டன் நிலக்கரி கி. பி. 1913-இல் ஏற்றுமதி செய்யப்பட்டதாக அரசியலறிக்கை கூறுகின்றது.

புதிய தென்வேல்ஸின் நிலக்கரியே பெரும்பாலும் அயல்நாடுகட்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றது. உள்நாட்டில் நிலக்கரி மிகுதியாக வெட்டியெடுக்கப்படுவதால், பிரிட்டனிலிருந்து ஆஸ்திரேலியாவுக்கு நிலக்கரி இறக்குமதியாவதை இப்போது ஆட்சியாளர் கட்டுப்படுத்தியுள்ளனர்.

## உலோகத் தொழில்கள்

சுரங்கங்களில் உலோகங்களை வெட்டியெடுக்குந் தொழிலோடு உலோகங்களை உருக்கிப் பல சிறு கருவிகளை உண்டாக்குந் தொழிலும் ஆஸ்திரேலியாவில் வளர்ச்சி அடைந்துள்ளது. புதிய தென்வேல்ஸிலுள்ள கெம்ளா (Kembla) துறைமுகம், சிட்னி, நியூகாசில் ஆகிய இடங்களில் உலோக உருக்குத் தொழிற்சாலைகள் நிறுவப்பட்டுள்ளன. இத்தொழிற்சாலைகள் அவற்றைச் சூழ்ந்துள்ள இடங்களிற் கிடைக்கும் உலோகங்களைத் திரட்டி உருக்கி, உழவுக் கருவிகளையும், பிற இயந்திரக் கருவிகளையும் செய்கின்றன. ஆஸ்திரேலியாவில் கிடைக்கும் இரும்பு, எஃகு உலோகங்கள் பொறியியற் கருவிகளும், போக்குவரவுக் கருவிகளும் மிகுதியாகச் செய்வதற்குப் பயன்படுகின்றன. இதனால் ஆஸ்திரேலியா வெளிநாடுகளினின்று தேவைகளை

எதிர்பார்த்திருக்கும் அவலநிலை குன்றிவருகின்றது. கி. பி. 1938-இல் எடுத்த கணக்கின்படி ஏறக்குறைய ஆயிரத்துக்கு மேற்பட்ட பொறியியல் நிலையங்களும் (Engineering Centres), நானூற்று ஐம்பது உருக்குத் தொழிற்சாலைகளும் (Smelting Works) ஆஸ்திரேலியாவில் தோன்றியுள்ளன.

## காட்டுப் பண்ணைத் தொழில்

விஞ்ஞான முறையில் காடுகளை வளர்த்தல் ஆஸ்திரேலியாவில் பயன்மிகும் பெருந்தொழிலாகச் சிறப்புற்றிருக்கிறது. கி. பி. 1926-இல் ஆஸ்திரேலிய அரசாங்கம் ஏற்படுத்திய காட்டுத் தொழிற் பண்ணை இப்போது நன்கு செயலாற்றி வருகின்றது. அரசாங்க உடைமையான காடுகளின் பரப்பு ஏறக்குறைய ஒரு கோடி அறுபத்தொன்பது லட்சம் ஏகர்; அரசாங்கத்திற்கு உரிமையாகாத காடுகளின் பரப்பு எண்பது லட்சம் ஏகர் அளவில் இருந்தது. ஆயினும், சவுக்க மரக் காடுகளை அரசாங்க விதிகளை மீறிச் சிலர் அழிப்பதாலும், காட்டுத்தீ திடீரென்று தோன்றிப் பரவி மரங்களை எரித்துவிடுவதாலும், சவுக்க மரங்களை அறுக்கும் போது அவற்றில் பாதிக்கு மேற்பட்ட அளவு வீணாக்கப்படுவதாலும், ஆஸ்திரேலியாவில் காடு வளர்ப்பது மிகுந்த பயனளிக்கவில்லை. இக்குறைபாடுகளைக் கண்ட ஆட்சியாளர், சட்டங்களை இயற்றிக் காடுகளைக் காத்து, விஞ்ஞான முறையில் மரங்களை அறுத்துப் பயன்களைப் பெருக்கிக் கொண்டுள்ளனர்.

ஆஸ்திரேலியாவில் சவுக்கு, பைன், சைப்பிரஸ், ஜாரா, காரி, யூக்கிளிப்டஸ், சந்தனம் முதலிய மரங்கள் காடுகளில் செழித்து வளர்கின்றன.

இவை தென்னுப்பிரிக்கா, ஜப்பான், பிரிட்டன், ஜெர்மனி ஆகிய நாடுகட்கு ஏற்றுமதியாகின்றன. யூக்கிளிப்டஸ் மரத்தினின்று தயாரிக்கப்படும் யூக்கிளிப்டஸ் தைலம் பிரிட்டனுக்கும் ஜெர்மனிக்கும் அனுப்பப்படுகிறது; அது ஆண்டுக்கு ஏறக்குறைய ஒரு லட்சத்து முப்பதினுயிரம் பவுன் மதிப்புடையது என்று அரசியலறிக்கை கூறுகின்றது. மேலும், சந்தனக் கட்டைகள் ஆஸ்திரேலியாவினின்று சீன நாட்டுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன. ஆஸ்தி ரேலியாவில் காட்டு மரங்களே தனிப் பெருஞ் செல்வங்களாக அமைந்திருக்கின்றன என்று கூறுதல் மிகையன்று. காடு வளர்க்குந் தொழிலை மேன்மேலும் சீர்த்திருத்திவரின், ஏறக்குறைய இரண்டேகால் கோடி மக்கள் அதனுல் கவலையின்றி வாழ்வதற்கு வழி பிறக்கும் என்று அரசாங்க அதி காரிகள் என்னிடம் கூறினர்.

## மீன் பண்ணைத் தொழில்

ஆஸ்திரேலியாவைச் சூழ்ந்த கடற்பகுதி களிலும், உள்நாட்டு நீர்நிலைகளிலும் பலவகை மீன்கள் வாழ்கின்றன. உள்நாட்டு நீர்நிலையில் மீன் பிடித்தல் ஒரு களியாட்டமாகவே நடந்து வரு கிறது; வாணிகத் தொழிலின் பொருட்டு மீன் பிடித்தல் அங்கு நடைபெறவில்லை. ஆயின், ஆஸ்திரேலியக் கடல்களில் மீன் பண்ணைக்காரர் மீன் பிடித்து உள்நாட்டில் விற்றும், வெளிநாடுகட்கு அனுப்பியும் தங்கள் மீன் பண்ணைத் தொழிலை வளர்க்கின்றனர். மீன் பண்ணை ஆராய்ச்சிக் காகவே ஒரு பாய்மரக்கலத்தை ஆஸ்திரேலிய அரசாங்கம் கி. பி. 1938-இல் கடலில் விடத் தொடங் கியது. அம்மரக்கலம் அலைகடலெங்கும் சுர

வந்தது. பல ஆராய்ச்சியாளர் அதில் கடற்செலவு செய்து எங்கெங்கே எவ்வெவ்வகை மீன்கள் வாழ்கின்றன என்பதைக் கண்டு பிடித்து, ஆராய்ச்சிக் குறிப்புக்கள் வரைந்து, அரசாங்கத்திற்கு அனுப்பினர். அவ்வாண்டு முதல் மீன் பண்ணைத் தொழில் விஞ்ஞான முறையில் ஆஸ்திரேலியாவில் வளரத் தொடங்கியது; அரசாங்கம் நிறுவிய ஒரு மீன் பண்ணை ஆய்வுக்கூடமும், பண்ணைக் கழகமும் புதிய தென்வேல்ஸில் உள்ள 'ஹாகிங்' (Hacking) என்னும் துறைமுகத்தில் திறக்கப்பட்டன; மீன்கள் வாழும் இரு கடற்பகுதிகள் தேர்ந்தெடுக்கப் பட்டன; அவற்றுள் ஒன்று சிட்னிக்கருகே இரு நூறு மைல் சுற்றளவும், மற்றொன்று ஹோவே (Howe) துறைமுகத்தில் முந்நூறு மைல் சுற்றளவும் உடையன. இவ்விரு கடற்பகுதிகளிலிருந்தும் மீன்களைப் பிடித்து மெல்பர்ன், சிட்னி, தென் குவீன்ஸ்லாந்து ஆகிய நகரங்களில் உள்ள மீன் சந்தைகட்குக் கொண்டு சென்று இன்றும் விற்று வருகின்றனர்.

## முத்தெடுக்குந் தொழில்

முத்துச்சிப்பி வளர்த்தலும் மீன் பண்ணையில் மற்றொரு துணைத்தொழிலாக அமைந்துள்ளது. 'யார்க்' துறைமுகத்தினின்று 'ஷார்க்' வளைகுடா வரையுள்ள கடற்கரைகளில் எண்ணிறந்த முத்துச் சிப்பிகள் பற்பல வகைகளாகக் கிடைக்கின்றன. முத்துச் சிப்பிகளைக் கடலினின்று எடுத்துச் சேர்ப்பதற்குத் தோணிகள் பயன்படுகின்றன. ஏறத்தாழ இருநூற்று ஐம்பது தோணிகள் இதற்காகக் கட்டப் பட்டுள்ளன; இரண்டாயிரம் பரதவர் தோணிகளை ஓட்டிச் சென்று சிப்பிகளை எடுத்து வருகின்றனர்.

தோணிப் பரதவர்கள் எல்லோரும் ஆசிய மக்களாக வும், தோணியுடைமையாளர் எல்லோரும் ஐரோப் பியர்களாகவும் இருக்கின்றனர். முத்துச்சிப்பிகளை எடுப்பதில் ஆசிய மக்களது உழைப்பே பெரிதும் பயன்படுவது மகிழ்ந்து பாராட்டற் பாலது. ஆஸ்தி ரேலியாவின் மேற்கே 'புரூம்' (Broome) என்பது தான் முத்துச் சிப்பிகட்குத் தலைமையிடமாகத் திகழ்கின்றது. கிழக்குக் கரையிலுள்ள வியாழன் தீவும் (Thursday Island) முத்துச் சிப்பிகளை உடைய கடற்கரையைப் பெற்றிருக்கின்றது.

மீன்களைப் பிடித்துத் தகரப் பெட்டிகளில் பக்கு வமாக அடைத்து வெளிநாடுகட்கு ஏற்றுமதி செய் தல் ஆஸ்திரேலியாவின் இயந்திரத் தொழில்களில் ஒன்ருகும். கி. பி. 1936-இல் ஆஸ்திரேலியாவுக்குக் கானடா, பிரிட்டன், நார்வே ஆகிய நாடுகளி னின்று மீன் இறக்குமதியாயிற்று. இப்போது மீன் இறக்குமதி மிகக் குறைவே; மீன் பண்ணைத் தொழி லின் வளர்ச்சியால், ஆஸ்திரேலியர் தங்கட்கு வேண்டிய மீன் வகைகளைப் பெற்றுக் கொண்டு, எஞ்சியவற்றை வெளிநாடுகட்கு அனுப்புகின்றனர். இத்தொழில் எதிர்காலத்தில் மேலும் வளர்ச்சியுறும் என்று இத்தொழிலதிபர் என்னிடம் கூறினர்.

## தொழில் வளம்

ஆஸ்திரேலிய அரசாங்கம் தன் நாட்டு மூலப் பொருள்களைக் கொண்டு பல தொழில்களைச் செய்வ தற்குத் தனது நாட்டு மக்களையே பயன்படுத்த விரும்புகின்றது. கி. பி. 1911-இல் 368,000 மக்கள் இயந்திரத் தொழிலில் உழைத்தனர். பின்னர் ஆண்டுதோறும் மக்கள் தொகை பெருகியது. கி. பி. 1939-இல் 594,000 மக்கள் இயந்திரத்தொழில்

புரியலாயினர். கி. பி. 1936-இல் எடுத்த கணக்கின் படி, இருபதினுயிரம் இயந்திரத் தொழிற்சாலைகள் ஆஸ்திரேலியாவில் இருந்தன என்று அறிகின்றோம். இத்தொழிற்சாலைகள் பெரிய நகரங்களிலும், நகரங் களுக்கு அருகிலும் அமைந்துள்ளன; ஏனெனில் நகரங்களை ஒட்டிய இடங்களில் போக்குவரவு முறை, மூலப்பொருள், சந்தை, உழைப்பாளர் கூட்டம் முதலியன எளிதில் கிடைக்கின்றன.

ஆஸ்திரேலியாவின் இயந்திரத் தொழில் சிறந்த உற்பத்திப் பொருள்களையே சார்ந்துள்ளது. சிற் றூர்ப் புறங்களில் நடக்கின்ற மேய்ச்சல் தொழிலின் பயனாகக் கம்பளம் நெய்தல், பனியால் உறையச் செய்து புலாலைப் பதப்படுத்துதல், செருப்புச் செய் தல், சோப்பும் மெழுகும் செய்தல் முதலிய தொழில் களைச் செய்கின்ற இயந்திர நிலையங்கள் ஏற்பட் டிருக்கின்றன. உழவுத் தொழிலின் பயனாக மா வரைத்தல், கருப்பஞ்சாறு வடித்தல், சர்க்கரை செய்தல், ரொட்டிகள் செய்தல் முதலிய தொழில் கள் பெருகி வருகின்றன. பாற் பண்ணைத் தொழி லின் பயனாக வெண்ணெய் எடுத்தல், பாலடைக் கட்டி செய்தல் முதலிய தொழில்கள் வளம் பெறு கின்றன. காட்டுத் தொழிலின் பயனாக மேசை, நாற்காலி முதலியன செய்யும் தொழில்கள் நடை பெறுகின்றன. சுரங்கத் தொழிலின் பயனாக இரும்பு, எஃகு, பொறியியற்கருவிகள், மின்சார விளக்குகள் முதலியன செய்யும் தொழில்கள் வளர்ச்சியடைந்துள்ளன.

ஆஸ்திரேலியாவில் மக்கள் நிலக்கரியை எரித் துத் தீயுண்டாக்கி நீராவியைப் படைத்துத் தொழில் வளத்தைப் பெறுகின்றனர்; மேலும் அவர்கள் மின் சாரத்தால் நூற்றுக்கு அறுபத்துநான்கு பங்கு

ஆற்றலை வளர்க்கின்றனர். புதிய தென் வேல்ஸ் மாநிலமே நிலக்கரி முதலிய மூலப் பொருள்களையும், பெருகிய மக்கள் தொகையையும் பெற்றிருக்கின்றது; இயந்திரத் தொழிலில் எல்லா மாநிலங்களைக் காட்டிலும் முன்னேறியிருப்பது புதிய தென் வேல்ஸ் மாநிலமே என்று கூறலாம். அதனையடுத்த மாநிலம் விக்டோரியா எனக் கூறுதல் பொருந்தும். ஆஸ்திரேலியாவின் இயந்திரத் தொழில்கள் அனைத்தும் உள்நாட்டு நன்மைக்காகவே நடைபெறுகின்றன. இயந்திரத் தொழிற்சாலைப் பொருள்களுள் நூற்றுக்கு ஐந்து பங்குப் பொருள்களே வெளிநாடுகட்கு ஏற்றுமதியாகின்றன. எஞ்சிய பொருள்கள் உள்நாட்டில் செலவழிகின்றன. எனவே, ஆஸ்திரேலியாவின் செல்வ வளத்திற்குக் காரணமாக இருப்பது இயந்திரத் தொழில்வளமே ஆகும். உணவு, உடை, குடியிருப்பு, குடிநீர், மின்சார விளக்கு, பிற உலோகப் பொருள்கள் முதலியன ஒவ்வொருநாளும் மக்கள் வாழ்வில் பயன்பட்டு வருகின்றன; இவையெல்லாம் ஆஸ்திரேலியாவில் இயந்திரத் தொழிலின் பயனாகப் போதிய அளவில் கிடைக்கின்றன.

ஆஸ்திரேலியாவின் தொழில் வளத்தைக் கூறும்பொழுது சிட்னிக்கு வடமேற்கில் உள்ள நியூகாசில் நகரத்தை மறப்பதரிது. நியூகாசில் நகரமே மிகப்பெரிய தொழிற்சாலை நகரமாகத் திகழ்கின்றது. அங்கு நூற்றுக்கு மேற்பட்ட தொழிற்சாலைகள் இருக்கின்றன. தொழிற்சாலைகளுக்குப் பொருள்களை எடுத்துச் செல்லும் இரயில்கள் எப்போதும் ஓடிக் கொண்டிருக்கின்றன. தொழிற்சாலைகளை இணைக்கும் பல இரயில் பாதைகள் குறுக்கும் நெடுக்குமாக நியூகாசில் நகரத்தில் ஓடுகின்றன.

## வெளிநாட்டு வாணிகம்

உள்நாட்டு மாநிலங்களுக்கிடையே சுங்கவரி நீக்கப்பட்டவுடன் வெளிநாட்டு வாணிகம் ஆஸ்திரேலியாவில் பெருகத் தொடங்கிற்று. கி. பி. 1936-இல் வெளிநாட்டு வாணிகத்தொகை இருபத்தொரு கோடி அறுபது லட்சம் பவுன் ஆகும். கி. பி. 1892 முதல் கி. பி. 1920 வரை ஆஸ்திரேலியாவில் ஏற்றுமதியே இறக்குமதியைக் காட்டிலும் மிகுதியாக நடந்து வந்தது. கி. பி. 1930-இல் இறக்குமதி உயரத் தலைப்பட்டது. பின்னர் கி. பி. 1931 முதல் கி. பி. 1940 வரை ஏற்றுமதியே மிகுந்திருந்தது என்று ஆஸ்திரேலிய அரசியலறிக்கை தெரிவிக்கின்றது. புதிய தென்வேல்ஸ், விக்டோரியா ஆகிய இரு மாநிலங்களும் வெளிநாட்டு வாணிகத்தில் நூற்றுக்கு முறையே நரற்பத்திரண்டு பங்கும், இருபத்தொன்பது பங்கும் கொண்டிருந்தன; தென் ஆஸ்திரேலியாவும் குவீன்ஸ்லாந்தும் நூற்றுக்குப் பத்துப் பங்கே கொண்டிருந்தன. ஆயின், இன்று ஒவ்வொரு மாகாணமும் தன் ஏற்றுமதியை வளர்த்து வருகின்றது குறிப்பிடத்தக்கது.

## ஏற்றுமதிப் பொருள்

கி. பி. 1927 முதல் கி. பி. 1937 வரை நடந்த ஏற்றுமதியில் ஆட்டுக் கம்பளங்கள் நூற்றுக்கு ஐம்பத்தொரு பங்கு மதிப்புப் பெற்றிருந்தன; கோதுமை மாவு இருபத்துநான்கு பங்கும், சுரங்கப்பொருள் பத்துப்பங்கும், பாற்பண்ணைப் பொருள் ஒன்பது பங்கும், மரங்களும் மீன் வகைகளும் ஒரு பங்கும், பெற்றிருந்தன. ஆஸ்திரேலியாவுக்கு ஏற்றுமதியில்

உழவுத்தொழில், பாற்பண்ணைத் தொழில், ஆகிய இருதொழில்களும் மிகுந்த செல்வத்தைக் கொடுக்கின்றன என்று கூறுவது உண்மையாகும். பெரும்பான்மையான ஏற்றுமதி அமெரிக்காவுடன் நடைபெறுகிறது. கம்பளம், கோதுமை, வெண்ணெய் ஆகியவை பிரான்சுக்கும், ஜப்பானுக்கும், நியூஜிலாந்துக்கும், கானடாவுக்கும் ஏற்றுமதியாக்கப்படுகின்றன.

## இறக்குமதிப் பொருள்

ஆஸ்திரேலியாவில் கி. பி. 1926-ஆம் ஆண்டு வரை இறக்குமதிப்பொருள் வெளிநாடுகளினின்று வருவிக்கப்பட்டது. பின்னர்ப் பல ஆண்டுகளாக இறக்குமதி வாணிகம் ஆஸ்திரேலியாவில் குறைந்தது என்று கூறலாம். அமெரிக்காவிலிருந்து இயந்திரங்களும் ஆடைகளும், காகிதங்களும், இரசாயனப் பொருள்களும் இறக்குமதியாகின்றன; ஜப்பானிலிருந்து பட்டுத் துணிகளும், இயந்திரங்களும் இறக்குமதியாகின்றன. ஜெர்மனி ஆஸ்திரேலியாவுக்கு இரசாயனப் பொருள்களைக் கொடுத்துதவுகின்றது; கானடாநாடு காகிதம், மோட்டார்ப்பொருள், மீன் முதலியவற்றை அனுப்புகிறது. முதல் உலகப் பெரும்போர் நடந்த காலத்தில் ஜெர்மனி முதலிய நாடுகள் தம் பொருள்களை அனுப்ப இயலாமற் போயின. ஆகவே, இறக்குமதி வாணிகம் காலப் போக்கில் ஆஸ்திரேலியாவில் குறையத் தலைப்பட்டது என்று அறிகிறோம். ஏற்றுமதி வாணிகமே பல மாநிலங்களிலும் உச்சநிலை எய்திற்று. பிற நாட்டாரை எதிர்பாராமல் தனது நாட்டுமக்களுடைய உழைப்பிலேயே வாழும் வகை

யைப் பெற்றிருப்பது, ஆஸ்திரேலியாவின் வாணிகத் துறை வளர்ச்சியையும் தொழில் வளர்ச்சியையும் நன்கு புலப்படுத்துகின்றது அல்லவா ?

## ஆஸ்திரேலியாவின் செல்வநிலை

ஆஸ்திரேலியா காமன்வெல்த் நாடுகளில் ஒன்றாதலால் இதன் செல்வநிலை நடு அரசாங்கச் செல்வநிலை, மாகாணச் செல்வநிலை என்று இருவகைப் படுகிறது. இவ்விரு செல்வ நிலைகளுக்கும் இடையே அவ்வப்போது பல மாறுபாடுகள் நிகழ்கின்றன. கி. பி. 1928-இல் ஏற்பட்ட செல்வ ஒப்பந்தச் சட்டத்தின் (Financial Agreement Act) விளைவாக ஆஸ்திரேலிய நடு அரசாங்கத்துக்கும் மாகாணங்கட்கும் இடையே தொடர்பு முறை தெளிவு பெற்றது. ஆஸ்திரேலியாவின் கடன்களை அடைப்பதெனவும், புதிய கடன் தொகைகளைக் கொடுத்து உதவுவதெனவும் நடு அரசாங்கம் ஒப்புக்கொண்டு பேருதவி புரிந்தது. இவ்வாறு அடுத்தடுத்துப் பல ஆண்டுகளிலும் ஆஸ்திரேலிய மாகாணங்கட்கு நடு அரசாங்கத்தின் உதவி கிடைத்து வந்துள்ளது. மேலும், ஆஸ்திரேலியக் கடன் திட்டக் குழுவின் (Australian Loan Council) முயற்சியால் மிகுந்த கடன் தொகைகள் ஆஸ்திரேலியாவுக்குக் கிடைக்கின்றன. இக்கடன் தொகை போக்கு வரவுச் செலவு, நீர்த் தேக்கத் திட்டச் செலவு, புதிய குடியிருப்புச் செலவு, பண்ணை வேலிச் செலவு, பொதுக் கட்டிடச் செலவு, நாட்டுப் பாதுகாப்புச் செலவு ஆகிய இவற்றுக்குப் பயன் படுகிறது.

## நாணயங்கள்

எந்த நாட்டிலும் நாணயங்களை அச்சிடுதல் அரசாங்கத்தின் தொழிலன்றோ? அத்தகைய தொழிலகங்களை அரசாங்கமே நிறுவி நடத்துதல் கண்கூடு. ஆஸ்திரேலியாவில் நாணயங்களை அச்சிட்டு வெளியிடும் தொழிலகங்கள் இரண்டுள்ளன; அவை மெல்பர்ன், பெர்த் ஆகிய இரு நகரங்களிலும் அமைந்திருக்கின்றன. வெள்ளி, செம்பு, பொன் ஆகிய உலோகங்கள் ஆஸ்திரேலியாவில் நாணயங்கள் அச்சிடுதற்குப் பயன்படுகின்றன. இவை அரசாங்க முத்திரை பெற்று நாணயத் தொழிலகங்களினின்று பல நகரங்கட்கு அனுப்பப்படுகின்றன. பொன் நாணயம் இன்று ஆஸ்திரேலியாவில் அச்சிட்டு வெளியிடப் பெறுவதில்லை.

## வங்கித் தொழில்

ஆஸ்திரேலியாவில் வங்கித்தொழில் (Banking) நாட்டு வருவாய்க்குப் பெரும் பயனளிப்பதாகும். காமன்வெல்த்தைச் சார்ந்த வங்கிகள் (Banks) ஆஸ்திரேலியாவில் நிறுவப்பட்டுள்ளன; ஒரு தலைமை வங்கியும், அதனைச் சார்ந்த ஒரு பொருட்சேமிப்பு வங்கியும், (Savings Bank) பதினாறு துணை வங்கிகளும் (Joint Banks) தொழில் புரிகின்றன. துணை வங்கிகளுள் மூன்று வங்கிகள் வெளிநாட்டாருடையவை; இவை கொடுக்கல் வாங்கல் நிமித்தமாக அமைக்கப்பட்டவை. ஆஸ்திரேலியாவுக்குச் சொந்தமான பொருட் சேமிப்பு வங்கிகள் விக்டோரியா, தென் ஆஸ்திரேலியா, டாஸ்மேனியா ஆகிய மாநிலங்களில் உள்ளன. வேறுசில

மாநிலங்களில் உள்ள பொருட் சேமிப்பு வங்கிகள் காமன் வெல்த் வங்கிகளுடன் இணைக்கப்பட் டுள்ளன. ஏறக்குறைய இருபத்தைந்துகோடி பவுன் பொருட் சேமிப்பு வங்கிகளின் மதிப்புத் தொகையாக வும், அதில் பதினைந்து கோடி பவுன் காமன்வெல்த் வங்கிகளின் மதிப்புத் தொகையாகவும் விளங்கு கின்றன. பொருட் சேமிப்பு வங்கிகளே அல்லாமல், ஆஸ்திரேலியச் சிற்றூர்களில் உழவுப் பண்ணை வங்கி களும் ஏற்பட்டிருக்கின்றன. இவை சிற்றூர் மக்க ளுக்கும், புதிதாகக் குடியேறுவோர்க்கும் கடன் தொகை அளித்து உதவுகின்றன.

# 9. தொழிலாளர் இயக்கம்

## தொழிலாளர் வேலைநிறுத்தம்

உரிமை பெற்ற குடியேற்ற மக்களும், விடுதலை பெற்ற கைதிகளும் ஆஸ்திரேலியாவில் தொழிலாளர் இயக்கம் தோன்றுவதற்கு முதற்காரணமாவர். அவர்களிடமே முதன் முதலில் தொழிலாளர் இன வுணர்ச்சியும், ஒற்றுமையும் ஏற்பட்டன. கி. பி. பத்தொன்பதாம் நூற்றுண்டில் பற்பல வாணிகத் துறைகளிலும், பிறதொழில் துறைகளிலும் ஒருநாளில் எட்டுமணி நேர வேலை செய்தல் வேண்டுமென்ற நியதி இருந்தது; தொழிலாளர் இயக்கங்கள் ஆங்காங்குத் தோன்றி அரசியலில் ஈடுபடாது உழைத்து வந்தன. புதிய தென்வேல்ஸின் சுரங்கங்களில் தொழிற் பூசல்கள் ஏற்பட்டமையால் தொழிலாளர் குடும்பங்கள் துன்புற்றன; சுரங்கத் தொழிலும் குன்றியது. கி. பி. 1890-ஆம் ஆண்டு ஜனவரித் திங்களில் சுரங்கத் தொழிலாளர் இருபத்தொன்பது வாரங்கள் வேலை நிறுத்தம் செய்தனர். அதனை அடுத்து ஆஸ்திரேலியாவின் பெரிய வேலை நிறுத்தம் தொடங்கிற்று. சிட்னியிலுள்ள நிலக்கரிச் சுரங்கம், பல் மாநிலங்களிலுள்ள ஆட்டுக்கம்பளப் பண்ணை முதலியவற்றில் வேலைசெய்த தொழிலாளர் வேலை நிறுத்தத்தில் ஒன்றுபட்டு இறங்கினர். அப்பெரிய வேலைநிறுத்தமே ஆஸ்திரேலியத் தொழிலாளரை அரசியலில் புகுத்திற்று என்று கூறலாம்.

## தொழிற்கட்சியின் கொள்கைகள்

தொழிற்கட்சியின் இருபெருங் கொள்கைகள் இங்கே குறிப்பிடத்தக்கன: ஆஸ்திரேலியாவிலுள்ள

பிற கட்சிகளிடமிருந்து விலகியிருப்பது அக்கொள் கைகளுள் ஒன்ருகும்; தொழிற்கட்சி அமைப்பை நடத்தும் ஒரு ஆய்வுக் குழுவை ஒழுங்காகச் செயலாற்றுவது மற்ருெரு கொள்கையாகும். இவ் விரண்டையும் செவ்வனே நிறைவேற்றியதால், தொழிற் கட்சி வளர்ச்சியுற்றது; கட்டுப்பாடு களுடன் வெற்றிபெற்றது. தொழிற் கட்சியின் இவ்விரு கொள்கைகளையும் நாம் தெளிவாக அறிதல் வேண்டும். (1) தேர்தற் காலத்தில் பிற கட்சி களுடன் உடன்படிக்கை செய்துகொண்டு தேர் தலில் நிற்பது எந்தக் கட்சிக்கும் ஏமாற்றத் தையே விளைவிக்கும். தேர்தல் முடிந்த பிறகு உடன்படிக்கைகளை மறந்துவிடுதலே கட்சிகளின் இயல்பாக இருப்பது உண்மையல்லவா! எனவே, தொழிற்கட்சி பிற கட்சிகளிடமிருந்து விலகிநிற்க விரும்பியதில் வியப்பொன்றும் இல்லை.

(2) தொழிற்கட்சியின் ஆய்வுக்குழு ஒவ்வோர் அரசியல் திட்டத்தையும் நன்கு ஆராய்ந்தது; பெரும்பான்மை உறுப்பினர் விருப்பத்தையே கட்சி யின் பொது விருப்பமாக மேற்கொண்டது. அத் தகைய கட்சிப் பொதுவிருப்பமே ஆஸ்திரேலியாவில் எல்லாத் தொழிற்கட்சியினராலும் ஏற்கப்படுவ தாயிற்று. பிற கட்சிகளிடமிருந்து விலகி நிற்க விரும்பிய தொழிற்கட்சி, ஆட்சியாளரை ஆதரிக்கத் தவறவில்லை. ஆயினும், ஆட்சியாளர் தொழிற் கட்சித் திட்டங்களை நிறைவேற்றுவதைக் கண்ணுங் கருத்துமாகப் பார்த்து ஆராய்ந்த பின்னரே ஆட்சி யாளர்க்குத் தொழிற்கட்சி முழு ஆதரவும் காட்ட முன்வந்தது.

## சட்டசபையில் தொழிற்கட்சி

காலப்போக்கில் ஆஸ்திரேலியாவின் எல்லா மாநிலங்களிலும் தொழிற்கட்சி வலிமைபெற்ற கட்சியாகத் திகழ்ந்தது. தேர்தலில் நிற்கும் ஒவ்வொரு தொழிற்கட்சியினரும் தமது கட்சிக்கும், தொழிலாளர் நலனுக்கும் உண்மையாகப் பாடுபடுவதாக உறுதிமொழி கூறுதல் வேண்டும். தென் ஆஸ்திரேலியாவில் தேர்தலில் நிற்கும் தொழிற்கட்சியினர் தாமே உழைத்துப் பாடுபடும் தொழிலாளராக இருத்தல் வேண்டுமென்ற விதியும் முன்னுட்களில் இருந்ததாகவும் நாம் அறிகின்றோம். ஆஸ்திரேலியாவில் நடு அரசு ஏற்பட்டபோது ஆட்சிமன்றங்களில் தொழிற்கட்சி இடம்பெற்றது; அது மூன்றிலொரு பங்கு வலிமை வாய்ந்திருந்தது; பிற கட்சிகளைக் காட்டிலும் பரந்த நோக்கங்களுடன் செயல் புரிந்தது.

கி. பி. பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதியிலும், கி. பி. இருபதாம் நூற்றுண்டிலும் ஆஸ்திரேலிய ஆட்சியில் தொழிற்கட்சியின் செல்வாக்கே சிறப்புற்றிருந்தது என்று கூறுவது மிகையன்று. ஆஸ்திரேலியாவில் ஒவ்வொரு சிறு தொழிலின் வளர்ச்சிக்கும் அரும்பாடுபட்டு உழைத்து, அதன் குறைபாடுகளை ஆட்சியாளரிடம் முறையிட்டு நீக்கிய பெருமை தொழிற்கட்சியையே சாரும்.

கி. பி. 1910-இல் தொழிற்கட்சியின் ஆட்சி ஆஸ்திரேலியாவில் நடந்தது. தொழிற்கட்சியின் அமைச்சர்கள் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுத் திறம்பட நடத்தினர். கி. பி. 1910 முதல் கி. பி. 1949 வரை தொழிற்கட்சியின் அரசு ஆஸ்திரேலியாவில் செவ்வனே நடந்தது. இடைப்பட்ட சிற்சில காலங்

களில் தொழிற்கட்சிக்கு எதிர்பார்த்த வெற்றி கிடைக்கவில்லை. ஆயினும் சட்டசபையில் தொழிற் கட்சி பலம் பொருந்திய கட்சி என்பதில் ஐயமில்லை.

## தொழிற்சாலைச் சட்டங்கள்

விக்டோரியா மாநிலமே தொழிற்சாலைச் சட்டங் களை நிறைவேற்றிய முதன்மைச் சிறப்புடையது. அரசாங்கத்தால் அமைக்கப்பெற்ற குழு ஒன்று கி. பி. 1884-இல் தொழிலாளி, முதலாளி ஆகிய இருவர் நிலைகளையும், ஆங்காங்கே உள்ள தொழில் நிலைகளையும் தெளிவாக ஆராய்ந்து ஓர் அறிக்கை வெளியிட்டது. நடைமுறைச் சட்டங்கள் பல இயற்ற அவ்வறிக்கையே உதவியது என்று கூறலாம். கி. பி. 1896-இல் தொழிற்சாலைகளுக்கும், கடைகளுக்கும் ஏற்பட்ட சட்டம் குறிப்பிடத்தக்க மாறுதலாகும். அதன் பின்னர்க் கி. பி. 1903, கி. பி. 1905, கி. பி. 1906 ஆகிய ஆண்டுகளில் அடுத்தடுத்துப் பற்பல தொழிற்சாலைச் சட்டங்கள் ஏற்பட்டன. அவை தொழிலாளர்க்குரிய கூலி மதிப்புகளைப் பற்றித் தெளிவாக ஆராய்ந்து முடிவு செய்துள்ளன. அவற்றின் சிறப்பான சிற்சில பகுதிகளைக் காண்போம். ஒவ்வொரு தொழிலுக்கும் ஒரு சிறப்புத் தொழிற்குழு (Special Board) அமைக்கப்பட்டது. அக்குழுவில் தொழிலாளி, முதலாளி ஆகிய இருவருடைய ஒத்த எண்ணிக்கை யுள்ள உறுப்பினர் இருந்தனர். அக்குழுத் தலைவ ராகக் கட்சிச் சார்பற்ற நடுநிலையாளர் ஒருவர் வீற்றிருந்தார்.

மேலும் மற்றொரு தொழில் அறமன்றமும் (Court of Industrial Appeals) நிறுவப்பெற்றது. இம்மன்றத்தின் சார்பில் ஒரு சிறப்புக்குழு பணி

யாற்றியது. இச்சிறப்புக்குழு தொழிலாளி, முதலாளி ஆகிய இருவருடைய வேண்டுகோளின்படியே அமைந்து, தொழிலாளர் கூலி மதிப்பு, வேலை நேரம், வேலை நேரமிகுதிக்குரிய கூலி, தொழிற் பயிற்சியாளர் கூலி மதிப்பு முதலிய பலவற்றையும் ஆராய்ந்து, தனது முடிவுகளைப் பதிவுசெய்து இறுதி அறிக்கை ஒன்றை வெளியிட்டது. சிறப்புக் குழுவின் இறுதியறிக்கையைத் தொழிற்கட்சி, தொழில் அறமன்றத்திற்கு அனுப்பியது. அதனைத் தொழிலமைச்சரே மன்றத்திற்கு அனுப்புதல் வேண்டுமென்பது விதியாகும். பின்னர்த் தொழில் அறமன்றம் கூடிச் சிறப்புக்குழுவின் முடிவை ஆராய்ந்து, அதன் கருத்தைப் புலப்படுத்தியது. ஒரோவழி தொழில் அறமன்றமே சிறப்புக்குழுவின் பணியை மேற்கொண்டு அறிக்கை தயாரித்துப் பின்னர் முடிவான கருத்தை வெளியிடலாம் என்றும் தொழிற்சாலைச் சட்டம் கூறிற்று. இவ்வாறு ஏற் பட்ட விக்டோரியா மாநிலத்தின் தொழிற்சாலைச் சட்டங்கள் ஆஸ்திரேலிய வரலாற்றில் மிகப் பெரிய மாறுதலைச் செய்தன என்று கூறலாம்.

விக்டோரியா மாநிலத்தைப் போலவே தென் ஆஸ்திரேலியா, குவீன்ஸ்லாந்து, மேற்கு ஆஸ்தி ரேலியா, புதிய தென் வேல்ஸ் ஆகிய மாநிலங்களும் தொழிற்சாலைச் சட்டங்களை இயற்றின. அவற்றுள் புதிய தென் வேல்ஸில் ஏற்பட்ட சட்டங்களைக் குறித்துச் சில செய்திகளை இங்கு அறிவோம்: அங்குக் கி. பி. 1908-இல் தொழில் உடன்படிக்கை நடுநிலைச் சட்டங்கள் (Industrial conciliation and Arbitration Act) உருவாயின. அவற்றின் பயனாக, ஒரு நடுநிலை மன்றம் தோற்றுவிக்கப் பெற்றது. அம்மன்றத்தில் தொழிலாளி, முதலாளி

ஆகிய இருவருடைய உறுப்பினரும் இருந்தனர். அது கூலி மதிப்பு, வேலை நேரம் முதலிய பலவற்றை யும் ஆராய்ச்சி செய்து அறிக்கை வெளியிட்டுப் பின்னர் அறம் வழங்கியது. ஆயினும், புதிய தென் வேல்ஸின் நடுநிலை மன்றத்தால் பெரும் பயன் ஏற்படவில்லை. தொழிலாளர் தமது துன்ப வாழ்வின் அல்லல் நீங்கக் கிளர்ச்சி புரியத்தொடங்கினர்; நடுநிலை மன்றத்தின் கொள்கைகளை ஒப்புக் கொள்ளாமல் பன்முறை வேலை நிறுத்தம் செய்தனர்.

## கூட்டாட்சி நடுநிலைச் சட்டம்

ஆஸ்திரேலியாவில் கி. பி. 1904-இல் கூட்டாட்சி நடுநிலைச் சட்டத்தைப்பற்றிப் (Federal Arbitration Act) பெரிய சொற்போர் நிகழ்ந்தது. தொழிற் சங்கங்களில் சேராத தொழிலாளரைக் காட்டிலும் தொழிற் சங்கங்களில் சேர்ந்த தொழிலாளர்க்கே முதலில் வேலை தேடிக் கொடுக்கவேண்டும் என்பது கூட்டாட்சி நடுநிலைச் சட்டத்தின் விதியாகும். இதனைச் சிலர் எதிர்த்துப் பேசினர். ஆயின், முடிவில் இது பெரும்பாலோரால் ஒப்புக்கொள்ளப் பட்டது. நடுநிலைச் சட்டத்தால் தொழிலாளர் வாழ்வு நலம் பெற்றது; நாட்டில் அமைதி நில வியது; இயந்திரத் தொழில்களும் வளர்ச்சியடைந் தன. இதனோடு பல சுங்கவரிச் சட்டங்களும் தொடர்ந்து இயற்றப்பட்டன. தொழிற்சாலைகளில் தொழிலாளர் போதிய ஊதியமும், நல்ல வாழ்க்கை நிலையும் பெறுவதற்கு இச்சட்டங்கள் துணை நின்றன. முடிவில் கி. பி. 1926-இல் ஆஸ்திரேலியா முழுதுக்குமுரிய தொழில் உடன்படிக்கையின்படி, நடுநிலை அறமன்றம் நிறுவப்பெற்றது. அம்மன்றத் தில் மூன்று நடுநிலை அறவோர் தலைமைபெற்றனர்.

ஆஸ்திரேலியா முழுதுக்கும் இம்மன்றம் தொழில் வளர்ச்சியையும், தொழிலாளர் நலனையும் பேணுவதற்காக ஏற்பட்டிருப்பது போற்றுதற்குரியது. தொழிலாளர் இயக்கத்தின் மேலான பெருஞ் சிறப்பு இதனால் புலப்படுகின்றது அல்லவா ?

## பலவகை வரிச்சட்டங்கள் (Tariff)

ஆஸ்திரேலிய ஆட்சியில் அவ்வப்போது ஏற்பட்ட தொழிற்சாலைச் சட்டங்களைப்பற்றி முன்பு சிறிது அறிந்தோம். இனி, வரிச்சட்டங்களைப்பற்றியும் சில செய்திகளைப் பார்ப்போம் : ஆஸ்திரேலிய நடு அரசாங்கத்தில் ஆறுவகையான வரிவிதிப்புகள் இருந்தன. இவ்வேறுபாடுகளை நீக்கி, ஒரே வகையான வரிவிதிப்பை நடு அரசாங்கம் ஏற்படுத்த எண்ணியது. இது பற்றிப் பற்பல அமைச்சர்களும் கருத்து வேற்றுமைகளுடன் பேசினர். எனினும், இறுதியில் வரிச்சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. இதனால் தொழிலாளர் பல பயன்களை எய்தினர். நடு அரசாங்கத்தின் செல்வநிலையை ஒழுங்குபடுத்தவும் கி. பி. 1908-இல் பெரு முயற்சி நடந்தது. நடு அரசாங்கத்தின் பொருளாளர் மாதந்தோறும் ஒவ்வொரு மாநிலத்திற்கும் எஞ்சிய பணத்தொகையைக் கொடுத்து வந்தார். இம்முறை கி. பி. 1908-இல் மாற்றியமைக்கப் பெற்றது. மாநிலங்களின் கப்பற்படை முதலிய பாதுகாப்புச் செலவுக்கு அப்பணம் பயன்படலாயிற்று.

இப்போது ஆஸ்திரேலியா பிரிட்டிஷ் பொருள்களை இறக்குமதி செய்ய விரும்புகின்றது ; மேலும் பிரிட்டிஷ் இறக்குமதியைப் பெருக்க எண்ணுகின்றது. அமெரிக்காவின் இறக்குமதிப் பொருள்களையும் ஆஸ்திரேலியா மதித்துப் பெற்றுக்கொள்

வதைக் காண்கிறோம். வரிச்சட்டங்களே இத்தகைய நிலையை ஆஸ்திரேலியாவில் ஏற்படுத்துகின்றன என்று கூறலாம்.

## தொழிலாளர் வாழ்க்கை

இன்று ஆஸ்திரேலியாவில் தொழிலாளர் யாவரும் நலம்பெற்று வாழ்கின்றனர். மிகக் குறைந்த சம்பளம்பெறும் தொழிலாளரை அங்குக் காண்பதரிது. தோட்டத்தொழிலாளர் மாதச் சம்பளம் அறுபது ரூபாயும், பழங்களைப் பறிக்கும் தொழிலாளர் ஐம்பது ரூபாயும் பெறுகின்றனர். ஆஸ்திரேலியாவின் தொழிலாளர் வீட்டு வசதி பெற்று வாழ்கின்றனர். ஆங்காங்கே நகராண்மைக் கழகங்கள் வீடுகட்டும் திட்டங்களைக் கொண்டு தொழிலாளர்க்குப் பல வீடுகளைக் கட்டித்தருகின்றன. உழவர், தொழிலாளர் ஆகியோரது பொது அறிவைப் பரப்புவதற்காகப் பல வார இதழ்களும், திங்கள் இதழ்களும் வெளியிடப்படுகின்றன.

# 10. நாட்டுப் பாதுகாப்பு

## படைகளின் தோற்றம்

கி. பி. 1870-இல் ஆஸ்திரேலியாவில் நாட்டுப் பற்று வளர்ந்தது; ஆஸ்திரேலியாவுக்குரிய படைகளை நிறுவ வேண்டுமென்ற கிளர்ச்சி எழுந்தது. அப்போது பிரிட்டிஷ் துருப்புகள் ஆஸ்திரேலியாவை விட்டு வெளியேறின. கி. பி. 1899 முதல் கி. பி. 1902 வரை நடந்த போயர் சண்டையில் (Boer War) ஆஸ்திரேலியப் படைகள் கலந்து கொண்டு போரிட்டன. அதன் பின்னர் ஆஸ்திரேலியக் கூட்டாட்சி அமைக்கப்பட்டவுடன் நாட்டுப் படைகளை உருவாக்கி வளர்க்க வேண்டுமென்று ஆட்சியாளர் பெருமுயற்சி கொண்டனர்; கி. பி. 1903-இல் பதினெட்டு வயது முதல் அறுபது வயது வரை உள்ளவர்க்குப் படைப் பயிற்சி அளிப்பது என்ற சட்டத்தை நிறைவேற்றினர்; கி. பி. 1909-இல் கிட்சனர் என்னும் அறிஞரது அறிவுரைக்கேற்பப் பலபடைப் பயிற்சி நிலையங்களை உண்டாக்கினர். முதல் உலகப் போரில் ஏறக்குறைய நான்கு லட்சம் ஆஸ்திரேலிய வீரர்கள் கலந்துகொண்டனர்; அவர்களுள் ஏறக்குறைய மூன்று லட்சம் வீரர்கள் வெளி நாடுகட்குச் சென்றனர். அதன் பின்னரும் ஏற்பட்ட பற்பல படைமாட்சியுடன் இன்று ஆஸ்திரேலியப் படை ஆற்றல் மிக்கு விளங்குகின்றது.

## இந்நாளில் ஆஸ்திரேலியப் படை

இன்று ஆஸ்திரேலியப் படை **நிலைப் படை** (Permanent force) எனவும், **தற்காலிகப் படை**

(Citizen force or militia) எனவும் இரண்டு பிரிவுகளாகத் திகழ்கின்றது. போர்க் காலங்களில், ஆறுதிங்கள் ஆஸ்திரேலியாவில் வாழ்ந்து வரும் பிரிட்டிஷ் மக்களுள் பதினெட்டு முதல் அறுபது வயதுடைய ஆண்மக்கள் கட்டாயமாகப் படையில் சேர வேண்டுமென்ற விதி அமைக்கப்பட்டிருந்தது. பின்னர்க் கி. பி. 1929-இல் ஏற்பட்ட பாதுகாப்புச் சட்டத்தின்படி மேற்குறித்த படைவிதி சற்று நெகிழத் தொடங்கியது. தற்காலிகப் படையில் பதினெட்டு வயது முதல் நாற்பது வயதுவரை உள்ளவர் சேர்ந்து மூன்றாண்டுகள் பயிற்சி பெறல் வேண்டும். தாமாக விரும்பி வருவோரே நிலைப் படையில் சேர்த்துக்கொள்ளப்படுவர். அப்படையில் ஐந்தாண்டுகள் அவர்களுக்குப் பயிற்சி அளிக்கப்படுகின்றது.

## படைவலியும் படையமைப்பும்

நிலைப்படையில் கி. பி. 1937-இல் எடுத்த கணக்கின்படி ஏறக்குறைய மூவாயிரவர் சேர்ந்திருந்தனர். அவருள் ஏறக்குறைய முந்நூறு போர்ப் பயிற்சி ஆசிரியர்கள் இருந்தனர். மேலும் நிலைப்படையில் கடற்கரைப் பாதுகாப்புப் படையும் (Coastal defence), வானவூர்தி எதிர்ப்புப் படையும், (Anti air craft units), நிலஅளவுப் படையும் (Survey corps), படையுதவிப் படையும் (Army service corps), மருத்துவ உதவிப் படையும் (Army medical corps) பல கிளைகளாக இணைக்கப் பெற்றுள்ளன. தற்காலிகப் படை அமைதியை நிலைநாட்டும் பெரும் பணியையே மேற்கொண்டுள்ளது. அது செய்தி பரப்புதலையும், கடற்கரைப் படைகளுக்கு உதவியையும் செய்துவருகின்றது.

ஆஸ்திரேலியாவில் வடக்குப் படை, கிழக்குப் படை, தெற்குப் படை, மேற்குப் படை என நான்கு படைப் பிரிவுகள் இருக்கின்றன. இந்நான்குடன் டார்வின் துறைமுகத்தின் தனிப் பெரும்படையும் ஒன்றுசேர்ந்து செயலாற்றுகின்றது. இவ்வாறு படைத் தலைமையிடங்கள் ஐந்து அமைந்திருக்கின்றன. படைப் பாதுகாப்புக் குழுவொன்று (Council of defence) எல்லாப் படைகளையும் மேற்பார்த்து ஆணை செலுத்துகின்றது. இக்குழுவில் முதலமைச்சர், பொருளாளர், வெளிநாட்டு உறவு அமைச்சர், பாதுகாப்பு அமைச்சர், மூன்று படைத் தலைவர் ஆகியோர் உறுப்பினராக உள்ளனர். மேலும் ஆஸ்திரேலியாவில் ஒரு படைக் குழுவும் (Military Board) அமைந்திருக்கிறது; இதில் பாதுகாப்பு அமைச்சரும், தலைமைப் படைப் பயிற்சியாசிரியரும், சில படைத் தலைவர்களும், அரசாங்கப் பொருள் அமைச்சரும் அவர்தம் செயலாளரும் உறுப்பினராக விளங்குகின்றனர்.

## போர்முறைக் கல்வி

ஆஸ்திரேலியாவில் பாட்டிங்டன் (Paddington) என்னும் நகரில் போர்ப் பயிற்சிக் கூடம் (Military College) ஒன்று நிறுவப் பட்டுள்ளது. அங்கு நான்காண்டுக் கல்வி கற்பிக்கப்படுகிறது. அக்கல்வி பெறுவோர் நிலைப்படையில் வீரர்களாகச் சேர்கின்றனர். நான்காண்டுக் கல்வியின் பின்னர் ஓராண்டு பிரிட்டன் அல்லது இந்தியாவுக்குப் போர்ப் பயிற்சியின் மேற்கல்விக்கு அரசாங்கம் அவர்களை அனுப்புகின்றது. சிட்னியில் ஒரு துப்பாக்கிப் பயிற்சிக் கூடமும் (School of Artillery),

இரண்ட்விச்சில் (Randwich) மற்ெருரு சிறு படைக் கலப் பயிற்சிக்கூடமும் (Small arms school), மெல்போர்னில் பிறிதொரு படை உதவிப் பயிற்சிக் கூடமும் (Army Service corps training school) ஏற்பட்டிருக்கின்றன. இவ்வெல்லாப் பயிற்சிக் கூடங்கட்கும் பொதுவான ஒரு நடு அலுவற் கூடமும் ஆஸ்திரேலியாவில் படைப்பயிற்சியை ஒழுங்கு பெற நடத்துகின்றது. இவ்வாறு ஆஸ்திரேலியாவில் போர்முறைக் கல்வி கற்பிக்கப்படுவதால் அந்நாடு வீரஞ் செறிந்த நாடாகத் திகழ்கின்றது.

## வானவூர்திப்படை

ஆஸ்திரேலியாவின் வானவூர்திப்படை, 'வானவூர்திப்படைக் குழு'வின் (Air Board) பார்வையில் இருக்கிறது. அக்குழுவில் ஆஸ்திரேலிய அமைச்சரும், இலண்டன் வானவூர்தி அமைச்சுக் குழுவின் உறுப்பினரும் பணியாற்றுகின்றனர். மேலும், இக்குழுவில் வானவூர்திப் படைத்தலைவர் மூவரும், பொருள் அமைச்சுக்குழுவினரும் இடம் பெறுகின்றனர். இப்போது ஆஸ்திரேலியாவின் வானவூர்திப் படையில் மூவாயிரத்திற்கு மேற்பட்ட வீரர் இருந்து வருகின்றனர்.

## கப்பற்படை

கி. பி. 1903-இல் பெரும் பொருட் செலவில் ஆஸ்திரேலிய அரசாங்கம் ஒரு கப்பற்படையை நிறுவியது. அதற்கடுத்த சில ஆண்டுகளில் போர்க் கப்பல்கள் சில வெளிநாடுகளிற் செய்யப்பெற்று ஆஸ்திரேலியாவிற்கு அளிக்கப்பட்டன. 'ஆஸ்திரேலியர்' 'சிட்னி', 'மெல்பர்ன்' எனப் பெயர்

பெற்ற மூன்று போர்க்கப்பல்கள் பெருமிதத்துடன் ஆஸ்திரேலியத் துறைகளைச் சுற்றி வட்டமிடத் தொடங்கின. பிலிண்டர்ஸ் (Flinders), கீலாங் (Geelong) என்னும் இடங்களில் இரண்டு கப்பற் படைப் பயிற்சிக்கூடங்கள் உள்ளன. முதல் உலகப் போரில் ஆஸ்திரேலியாவின் நீர்மூழ்கிக்கப்பல்கள் இரண்டு பசிபிக் பெருங்கடலில் தொண்டு செய்தன. இரண்டாம் உலகப்போரில் பல நீர்மூழ்கிக்கப்பல்கள் வேலை செய்தன. சிட்னியே ஆஸ்திரேலியாவின் பெரிய கப்பற்படைத் தளமாகும்.

# 11. பழங்குடிகள்

## உடலமைப்பு

ஆஸ்திரேலியாவில் உள்ள பழங்குடி மக்கள் தோற்றத்திலும் பண்பாட்டிலும் பிறநாட்டுப் பண்டைக்குடிகளிலிருந்தும் வேறுபட்டவராவர். இம்மக்கள் பழுப்பு நிறமும், நடுத்தர உயரமும், குறுகிய தலேயும், பின் சாய்ந்த நெற்றியும், பருத்த புருவ எலும்பு முகடும் உடையவர்; அகன்ற மூக்கும், பள்ளமான மூக்கடியும், முன்னுக்கு நீண்ட தாடையும், அகன்ற வாயும், கரிய முடியும் பெற்றவர். இம்மக்கள் தென்னிந்தியாவிலுள்ள மலேச்சாதியாரையும், இலங்கையிலுள்ள வேடரையும், மலேயா முதலிய கிழக்குப் பகுதிகளிலுள்ள ஆஸ்திரவாயிடுகளேப் போன்ற சில குழுக்களேயும் சேர்ந்தவர் என்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

## கருவிகள்

இவர்கள் ஈட்டி, வேல், வளேதடி, கேடயம், கற்கோடரி, கற்கத்தி, வலே, கூடை முதலியவற்றைக் கொண்டு காட்டில் உணவு தேடியும், விலங்குகளேயும் பறவைகளேயும் வேட்டையாடியும் வாழ்ந்துவருகின்றனர்.

## உடையும் தொழிலும்

இம்மக்கள் வறுமையிலும் அறியாமையிலும் மூழ்கி இருக்கின்றனர்; மூட நம்பிக்கை மிகுந்தவர்; ஆயின், அமைதியை விரும்புபவர். இவர்களில் பலர் உடையின்றியே வாழ்பவர்; சிலர் தம் மானத்தைக்

காக்க ஒரு சிறு துணியைமட்டுமே உடுப்பவர். இவர்கள் எருமை வேட்டையில் விருப்பம் உடைய வர்; அம்பு எய்வதில் பேராற்றல் படைத்தவர்; தம் உடல் உறுப்புக்களுக்குச் செந்நிறம் தீட்டுபவர். கிளிஞ்சல்களைச் சேர்த்து மாலையாக அணிவதில் மிகுந்த விருப்பம் உடையவர். இம்மக்களில் சிலர் குதிரைகளைப் பயன்படுத்துகின்றனர்.

## அலையும் குடிகள்

ஒரு குறிப்பிட்ட அடையாளம் பொறித்த விலங்கு அல்லது செடி இவர்தம் போர்க்காலத்து அடையாளமாக விளங்குகிறது. நல்ல பருவகாலம் என இவர்கள் எண்ணிய காலத்தில் இந்த அடையாளத்தைப் பொருத்தி மகிழ்கின்றனர். இவர்களிடம் உழவுத்தொழில் காணப்படவில்லை. இவர்கள் நாய்களைப் பழக்கும் முறையைத் தெரிந்து கொண்டிருக்கிறார்கள். ஓரிடத்தில் நிலையாக வீடு அமைத்து வாழும் வாழ்க்கையை இவர்கள் அறியவில்லை. இவர்கள் வேட்டையாடுபவராகவும், மீன் பிடிப்பவராகவும், உணவு தேடுபவராகவும் வாழ்கின்றனர். இவர்கள் திறமையற்ற வழிகாட்டிகளாகவும், பல்லுயிர்களின் பழக்கவழக்கங்களை அறிந்தவராகவும் மரஞ்செடிகளின் வளர்ச்சி முறையைத் தெரிந்தவராகவும் இருந்துவருகின்றனர். ஒவ்வொருநாளும் இவர்கள் பயன்படுத்தும் போர்க்கருவிகளையே தட்டியெழுப்பி இசைக்கருவிகளாக மாற்றுகின்றனர். அப்பொழுது கடற்சிப்பிகளும் ஒலியெழுப்பப் பயன்படுகின்றன. இவர்கள் ஓவியக்கலையில் திறமை அற்றவர்கள்; சில வண்ணங்களையே அறிந்துள்ளனர். இவர்கள் வரையும் படம் சிறப்பாக நேர்க் கோடாகவே காட்சியளிக்கும்.

## குடியமைப்பு

ஒவ்வொரு பழங்குடியும் தனக்குரிய இடமும் மொழியும் பெற்றுள்ளது. குடித்தலைவனே ஆணை செலுத்துவோனாக விளங்குகிறான். ஒவ்வொரு பழங்குடியும் சிறு சிறு குழுக்களாகப் பிரிக்கப் பட்டிருக்கிறது. குழுத்தலைவரும் குடித்தலைவரைப் போல மரபுவழியைப் பின்பற்றியே தலைமை ஏற்கின்றனர். பழங்குடியிலுள்ள முதியவர்கள் மந்திரங்கள் செய்வதில் தேர்ச்சி பெற்றுள்ளனர். பழங்குடி ஒவ்வொன்றும் ஏதேனும் ஒரு செடியையோ விலங்கையோ தனக்குரிய அடையாளமாகக் கொண் டிருக்கிறது. தங்கள் அடையாளத்தைக் காப்பதில் இப்பழங்குடிகள் கண்ணுங்கருத்துமாக இருக் கின்றனர்.

## திருமண முறை

இரத்தக் கலப்புள்ள ஆண்மகனையும் பெண் மகளையும் வாழ்க்கையில் ஒருவருக்கொருவர் துணை யாக இருக்குமாறு திருமணம் முடிப்பதே இப்பழங் குடிகளின் நோக்கம். இரத்தக் கலப்பற்ற முறையில் இவர்கள் பெண் கொள்வதும் கொடுப்பதுமில்லை. இவ்வாறு நடைபெறும் திருமண முறை பொதுப் படையாக இருவகைப்படும். தாய்வழி மாமனையும், அண்ணன் முறையில் வரும் ஆண்மகனையும் மணம் முடித்தல் இவர்களது வழக்கம்.

## சமய நிலை

ஒவ்வொரு மனிதனும் முன்வினைப் பயனால், பழைய பிறவியில் இருந்த ஒரு மனிதனின் புதுப் பிறப்பாகப் பிறக்கிறான் என்பது ஆஸ்திரேலியப்

பழங்குடிகளின் நம்பிக்கை. குடிகளுக்கு எல்லாம் முன்னோன் ஒருவன், பழங்குடிகள் அடையாள மிட்ட விலங்கினை ஒத்திருப்பான் என்றும் இவர்கள் நம்புகின்றனர். இவர்களிடையே பலவகை விழாக் கள் நடைபெறுகின்றன. பல்லைப் பிடுங்குதல், நெருப்பைச் சுற்றி ஆடுதல் என்பன அவற்றுள் சிலவாகும். உடல், உள்ளம் ஆகியவைபற்றிய மக்கள் இயல்புகளைத் தெரிவிக்கும் புராணங்களை யும், இதிகாசங்களையும் இக்குடிகள் கேட்டு இன்புறு கின்றனர்; இவற்றுள் சொல்லப்பட்ட கதைகளை நம்பி, புராணக் கடவுளரை வழிபடுகின்றனர். படைத்தவன் ஒருவனே என்ற நம்பிக்கை இக் குடிகளிடையே இல்லை.

## வியத்தகு கருவி

இப்பண்டைக் குடிகள் பயன்படுத்தும் வளை தடிக்கு ' பூமிராங் '' (Boomerang) என்பது பெயர். இது மரத்தால் செய்யப்பட்டது. இது அழகிய வளைவுகளுடன் கூடியது; வளர்பிறையைப் போன்ற அமைப்பை உடையது. பண்டைக் குடி கள் இதனை நன்ருகச் சுற்றி வீசி எறிவர். இவ்வாறு எறியப்பட்ட வளைதடி நெடுந்தொலைவு சென்று, பின்பு தன்னை எறிந்தவரிடமே வந்துசேர்ந்து விடும். இவ்வளைதடிக்குரிய ' பூமிராங் ' என்னும் பெயர், போரில் எதிரிகள் மீது குண்டுகளை வீசிப் புறப்பட்ட இடத்தை வந்தடையும் விமானங்களுக்கு இடப்பட்டுள்ளது. இப் பூமிராங் என்னும் சொல் வெள்ளை ஆஸ்திரேலியரது அன்ருட வாழ்வில் பேசப்படுகிறது. ஒருவருக்கொருவர் ஒரு பொருளை இரவலாகக் கொடுக்கும்பொழுது, அப்பொருளை மீண்டும் தனக்குத் திருப்பித் தரல் வேண்டும்

என்னும் கருத்தில், 'இது ஒரு பூமிராங் என்பது நினைவில் இருக்கட்டும்' என்று கூறுதல் வழக்கம். இங்ஙனம் இப் பழங்குடிமக்கள் கையாண்டு வரும் சொல், ஒருவகை வானவூர்தியின் பெயராகவும், வெள்ளை ஆஸ்திரேலியர் பேச்சு வழக்கிலும் இருத்தல், இப்பழங்குடி மக்களின் நினைவை என்றும் நிலைபெறச் செய்வதாகும் அன்றோ? நான் இக்கருவியையும், இம்மக்கள் பயன்படுத்திய வேறு கருவிகளையும் மெல்பர்ன் நகரப் பொருட்காட்சிச் சாலையில் கண்டேன்.

## நகரங்கள்

இப்பழங்குடி மக்கள் வைத்துள்ள பெயர்கள் இன்றைய ஆஸ்திரேலியாவில் சில நகரங்களுக்கு வழங்கி வருகின்றன. இன்றைய **கான்பரா** என்னும் நகரம் ஒரு பள்ளத்தாக்கிலுள்ள இரண்டு உயரிய மலைகள் மீது அமைந்திருக்கின்றது. 'கான்பரா' என்னும் சொல் 'பெண்ணின் மார்பு' என்னும் பொருளை உடையது. நகரம் அமைந்திருக்கும் இடத்தையும் பெயர்ப் பொருளையும் நோக்க, இப் பண்டை மக்களின் அறிவு நுட்பம் நன்கு விளங்கும். 'டூவூம்பா' (Toowoomba) என்பது மற்றொரு நகரத்தின் பெயர். இதுவும் இப்பழங்குடி மக்கள் வைத்த பெயரேயாகும்.

# 12. பலவகை உயிர்கள்

### மண்புழுக்கள்

ஆஸ்திரேலியாவின் இயற்கை யமைப்புக்குத் தக்கவாறு பலவகை உயிர்களும், மக்களும் வாழ்ந்து வருவதை நாம் காண்கிறோம். ஆஸ்திரேலி யாவில் நானூறு வகை உயிரினங்கள் வாழ்கின்றன வாம். இங்குச் சிலவகை மண்புழுக்கள் காணப்படு கின்றன. இவை கிடைத்தற்கரியன என்று உயிர் நூலார் கூறுகின்றனர். இத்தகைய மண்புழுக்கள் தென்னாப்பிரிக்காவிலும் ஜப்பானிலும் வாழ்கின் றன. உயிரின வளர்ச்சியில் ஆஸ்திரேலிய மண் புழுக்கள் மிகப் பழைய வடிவமுள்ளன. இங்குள்ள முதலைகள் ஆசியாவில் காணப்படும் முதலைகளைப் போலத் தோன்றுகின்றன. குவீன்ஸ்லாந்து முதலை கள் முப்பதடி நீளமுள்ளவை.

### பறவைகள்

'ஓடும் பறவை' என்னும் ஓரினம் ஆஸ்திரேலி யாவில் வாழ்கிறது. எமு, காசோவரி என்னும் ஓடும் பறவைகள் அங்குள்ளன; பலநிறக் கிளிகள் வாழ் கின்றன; குரலை எதிரொலி செய்யும் 'லயர்' என் னும் பறவையும் அங்கு உண்டு. பாடும் பறவை யான 'மினுரா' என்பதும், தேன் எடுத்துண்ணும் ஒருவகைப் பறவையும் வாழ்கின்றன.

### விலங்குகள்

ஆஸ்திரேலியாவில் குதிரைகள் மிகுதியாக உண்டு. அவை நடு ஆஸ்திரேலியாவில் போக்கு வரவுக்குப் பெருந்துணைபுரிகின்றன. ஆஸ்திரேலி.

யர் பேரன்புடன் நாய்களை வளர்க்கின்றனர். ஒருவ ரது நாய் சில மணி நேரம் காணப்படவில்லையா யின், அதற்குரியவர் அது காணப்படவில்லை என்ப தைச் செய்தித் தாள்களில் வெளிப்படுத்தி விடுவார்; அது வந்து சேர்ந்தவுடன் அந்தச் செய்தியையும் அச்செய்தித் தாள்களின் அடுத்த பதிப்பில் வெளி யாக்கிவிடுவர். ஆஸ்திரேலியர் சிறப்பாக ஆடு மாடு களைத் தங்கள் உயிர்போலக் கருதிப் பாதுகாத்து வருகின்றனர். மேலும் இங்குக் 'கூக்காபாரா' எனப்படும் சிரிக்கும் கழுதை இருக்கிறது; இங்குக் காட்டு நாய்களும் கங்காருகளும் சிறப்புடையன.

## தபால் தலைகள்

ஆஸ்திரேலியக் காடுகளில் பழங்காலத்து மரங் கள் வளர்ந்திருக்கின்றன. சிலவகைச் செடிகளும் உயிரின வளர்ச்சியில் மிக்க தொன்மை வாய்ந் தவை. உயிரினங்களின் படங்கள் ஆஸ்திரேலி யாவில் தபால் தலைகளில் அச்சிடப்படுகின்றன. இச் செயல், அவர்கள் தங்கள் நாட்டு உயிரினங்கள் மீது கொண்டுள்ளபற்றை நன்கு அறிவிப்பதாகு மன்றோ?

## எமு

ஆஸ்திரேலியப் பறவைகளுள் சில உலகத்தின் வேறு எப்பகுதியிலும் கிடைப்பதில்லை. அவற்றுள் குறிக்கத்தக்கது எமு, காசோவரி என்பன. எமு ஆஸ்திரேலியாவிலும் அதைச் சுற்றியுள்ள தீவு களிலும் வாழும் பறவை. இது நெருப்புக்கோழிக்கு அடுத்த நிலையில் பிற எல்லாப் பறவைகளினும் பெரியதாக இருக்கின்றது. இது தென் கிழக்கு ஆஸ்திரேலியாவில் மிகுதியாகக் காணப்படுகிறது.

இதன் தலைமீதும் உடல் முழுதும் நீண்ட இறகுகள் இருக்கின்றன. இதன் கட்டைவிரலின் உட்பகுதியில் கூரிய நகம் இருக்கின்றது. இப்பறவை பறக்கும் இயல்பினதன்று; நிலத்தின்மீது ஓடும் இயல்பினை உடையது. தரையில் அமைந்த பள்ளங்களே இதன் வாழ்விடங்களாகும். பழங்கள், கொட்டைகள், புல் பூண்டுகள் முதலியன இதன் உணவாகும். இவ்வினப் பறவைகள் சில சேர்ந்து கூட்டங்கூட்டமாக வாழும். இதன் முட்டை நீலமும் பச்சையும் கலந்த நிறமுடையது. இது வாழும் குழியில் ஒன்பது முதல் பதின்மூன்று முட்டைகள் சேர்ந்த பிறகே இது அடைகாக்கும். இதன் குஞ்சுகள் கண்ணைக் கவரும் அழகுடையவை. நான் இப்பறவையையும் இதன் குஞ்சுகளையும் சிட்னியை அடுத்த சிறு தீவில் உள்ள உயிர்க்காட்சி நிலையத்தில் கண்டு களித்தேன்.

### காசோவரி

காசோவரி எமுவைவிடச் சிறிய உருவத்தை உடையது. இது காடுகளில் வாழ்வது. இதுவும் நீண்ட இறகுகளை உடையது. இதன் இறகுகள் கழுத்தையும் முதுகையும் மூடியிருக்கும். ஒரு மயிர்ச் சட்டை உடம்பு முழுவதும் போர்த்தாற் போல இதன் இறகுகள் நெருக்கமாகவும் நீண்டும் அமைந்திருக்கின்றன. இதன் கால்கள் உறுதி வாய்ந்தவை. இதன் கட்டை விரல்களில் நீளமும் உறுதியும் வாய்ந்த நகங்கள் உண்டு. இதன் உயரம் ஐந்தடியாகும். இதன் தலைமீது வீரர் தலையில் அணியும் எஃகுக் குல்லாய் போன்ற ஓர் அமைப்புக் காணப்படுகின்றது. இது கொட்டைகளையும், புல் பூண்டுகளையும் வேறு சில உயிர்களையும் தின்று உயிர்வாழ்கின்றது. இப்பறவை மிகவும் மான

முடையது. இது மிகுந்த வேகத்துடன் ஓடவல்லது ஆதலால் எளிதில் பிடிக்கப்படுவதன்று. இதுவும் மேற்சொல்லப்பட்ட உயிர்க்காட்சி நிலையத்தில் எனக்குக் காட்சியளித்து என் இன்பத்தைப் பெருக்கியது.

## கங்காரு

விலங்கினங்களுள் வியப்பிற்குரியது கங்காரு. இதுவும் ஆஸ்திரேலியாவைத் தவிர வேறு எந் நாட்டிலும் காணப்படாதது. இதன் முன் கால்களை விடப் பின் கால்கள் மிகவும் நீளமானவை. அதனால் இது தத்தித் தத்திச் செல்ல இயலுகிறது ; இது ஒரே சமயத்தில் முப்பதடி தூரம் தாவ வல்லது. இதற்கு நீண்ட மயிரடர்ந்த வால் இருக்கிறது. இவ்விலங்கு புற்பூண்டுகளை உண்டு வாழ்வது. இது குவீன்ஸ் லாந்தில் மிகுதியாக இருக்கின்றது.

இதன் வயிற்றில் ஒரு பை இருக்கின்றது. அப் பையில் இதன் குட்டி வளருகின்றது. நீண்டு முன் புறமுள்ள இதன் பற்கள் எளிதில் புற்பூண்டு களைக் கடிக்க உதவுகின்றன. இதன் தலை ஆட்டின் தலைபோன்றது. இது எட்டடி உயரம் நிற்கவல்லது. இதன் வால் கூர்மையாகவும் கனமாகவும் உள்ளது. இது வேகமாக ஓடும்பொழுது இவ்வால் நிமிர்ந் திருக்கும். இது மெதுவாகத் தன் முன் கால்களால் நடக்கும் பொழுது இதன் வாலும் முன்காற் பகுதியும் இதற்கு உதவியாக இருக்கின்றன. இது நிற்கும் பொழுதும் இருக்கும் பொழுதும் பின்னங்கால்கள் அசைகின்றன. அப்பொழுது வால் இதற்கு ஊன்று கோல் போல் உதவுகிறது.

இதன் கண்கள் கறுத்தனவாகவும் பழுப்பு நிறத்தனவாகவும் இருக்கின்றன. இதன் வாய்

சிறியது. அவ்வாய் இரண்டு உதடுகளாலும் ஓரளவு மூடப்பட்டுள்ளது. இதன் கண்கள் நாற்புறமும் காணவல்லவை. இதன் உடல்மீது அடர்ந்துள்ள மயிர் மென்மையாக இருக்கின்றது இது ஒருமுறை ஒரு குட்டியையே ஈனும் இயல்புடையது.

இந்தக் கங்காரு இனத்துள் ஏறத்தாழ இருபது வகை உண்டு. உருவ அமைப்பிலும் பலவகை உண்டு. இவை அனைத்தும் ஆஸ்தி ரேலியாவிலும் அதைச் சுற்றியுள்ள தீவுகளில் உள்ள அடர்ந்த காடுகளிலும் வாழ்கின்றன. இவற்றுட் சில பகலில் பதுங்கியிருந்து இரவில் வெளிப்பட்டு இரை தேடுகின்றன. இவற்றுள் பழுப்பு நிற முடையன சில. இவை பசும் புல்வெளிகளில் வாழ் வன. செந்நிறக் கங்காரு உள்நாட்டுப் பகுதிகளில் வாழுகின்றது. வேறொரு வகையின பாறைகளை அடுத்த இடங்களிலும் ஆற்றுப் படுகைகளிலும் வாழ்கின்றன. மற்றொரு வகையின ஒரு சிறிய குதிரையின் எடை உள்ளவை. அவை வாலின் நுனியில் ஆணி போன்ற கொம்பு வளர்ச்சி உடையன. இவை பார்க்க அழகானவை. நாம் இப்பலவகைக் கங்காருகளையும் உயிர்க்காட்சிச் சாலையில் காணலாம்.

## மாகாணங்களும் சிறப்பு நகரங்களும்

டார்வின்

டௌன்ஸ்வில்லி

வட மாகாணம்

மேற்கு ஆஸ்திரேலியா

குவீன்ஸ்லாந்து

பிரிஸ்பேன்

தென் ஆஸ்திரேலியா

பொத்

புதிய தென்வேல்ஸ்

சிட்னி

அடிலெய்ட்

கான்பரா

விக்டோரியா

மெல்பான்

டாஸ்மேனியா

# 13. சிறப்பு நகரங்கள்

ஆஸ்திரேலியாவின் வரலாறு, அரசியல், போக்கு வரவு, தொழில், வாணிகம் முதலிய பல செய்திகளை நாம் அறிந்தோம். அதன் சிறப்பையும் நாகரிகத்தையும் எடுத்துக் காட்டுவன நகரங்களே ஆகும். நகர வாழ்வே ஆஸ்திரேலியரால் பெரிதும் விரும்பப்படுகிறது. ஆகையால் நகரங்களில் மிகப் பெருகிய மக்கள் தொகையும், தொழில் வளர்ச்சியும் காணப்படுகின்றன. ஆஸ்திரேலிய நகரங்களுள் சிட்னி, மெல்பர்ன், அடிலெய்ட், பெர்த், டார்வின், பிரிஸ்பேன், கான்பரா, டவுன்ஸ்வில்லி என்பன குறிப்பிடத் தக்கவை.

## சிட்னி

ஆஸ்திரேலியாவின் மிகப்பழைய நகரங்களுள் சிட்னி சிறப்பு மிக்கது. இஃது இன்று புதிய தென் வேல்ஸின் தலைநகரமாகத் திகழ்கின்றது. முதன் முதலில் சிட்னியின் நிலப்பரப்பே புதிய தென் வேல்ஸ் மாநிலம் என்றும், அதுவே ஆஸ்திரேலியா கண்டம் என்றும் பிரிட்டிஷ் மக்கள் கருதினர். பின்னர் உள்நாட்டு ஆராய்ச்சியின் பயனாகச் சிட்னி நகரம் புதிய தென் வேல்ஸின் ஒரு பகுதியென்பது அறியப்பட்டது; புதிய தென்வேல்ஸைப் போலப் பல இடங்களை உடையது ஆஸ்திரேலியா என்பதும் பின்பு கண்டறியப்பட்டது.

சிட்னி நகரில் ஏறக்குறைய பன்னிரண்டு லட்சம் மக்கள் வாழ்கின்றனர். நகரத்தின் வட பகுதியில் மக்கள் வாழிடங்களும், தெற்குப் பகுதி

யில் தொழிற்சாலைகளும் அமைந்திருக்கின்றன. சிட்னி உடல் நலத்திற்கு மிகவும் பொருந்துகின்ற தட்பவெப்பம் உடையது. குளிர் காலத்தில் மேல் காற்று மென்மையாக வீசிக் களிப்பு ஊட்டுகின்றது. கோடைக்காலத்தில் சிற்சில நாட்களைத்தவிரப் பல நாட்களில் வெப்பம் மிகுந்திருப்பதில்லை. ஆண்டு முழுதும் அங்கு மழைபெய்து இனிமை தருகின்றது.

சிட்னியில் கண்ணைக் கவரும் கட்டிடங்கள் அழகுடன் விளங்குகின்றன. இரண்டு பெரிய மாதா கோவில்களும், பல்கலைக்கழகமும், அஞ்சல் நிலையமும், அரசாங்க அலுவலகங்களும் காட்சிக்கு இனியன. சிட்னியில் மிக்க அகலமான நீண்ட தெருக்களைக் கண்டபோது நான் பெரிதும் வியப்பு அடைந்தேன். அங்குள்ள சட்டசபை மன்றம் வரலாற்றுப் புகழுடையது. நகரத்தில் ஆங்காங்கே பூங்காக்கள், புதியவராக வந்து பார்க்கும் வெளிநாட்டார் உள்ளங்கவரும் வகையில் மலர்ச்சியுடன் வரவேற்கின்றன. மூர்பூங்காவும், பயிர்நூலாராய்ச்சித் தோட்டமும், கிரிக்கெட் விளையாட்டு வெளியும், அரசாங்க உழவுப்பண்ணை நிலமும் சிட்னி நகருக்குக் குன்றாப் புகழைத் தருகின்றன. சிட்னியின் துறைமுகம் உவகை பூத்த சோலையாகக் காட்சியளிக்கிறது. அங்குக் கடலில் நீர் விளையாட்டுப் புரிந்து மகிழ ஆஸ்திரேலியர் கூட்டமாக நாள்தோறும் செல்கின்றனர். அங்குள்ள உல்லாசப் படகுகளில் வானொலிப்பெட்டி இன்னிசை பாடுகின்றது. துறைமுகத்திற்கும் நகரத்திற்கும் இடையே பல மின்சாரத் தொடர்வண்டிகளும், புகைவண்டிகளும் எப்போதும் ஓடிக்கொண்டிருக்கின்றன. எஃகால் செய்யப்பட்ட வளைந்த பெரிய பாலம்



சிட்னி துறைமுகம்

துறைமுகத்தில் உயர்ந்தோங்கித் தோன்றுகின்றது. அத்தகைய பாலங்கள் உலகில் மிகச் சிலவாகும்.

சிட்னி தொழிற்சாலைகளுக்குப் பெயர்பெற்ற பெருநகரமாகும். அங்கு ஏறக்குறைய 6200 தொழிற் சாலைகள் உள்ளன. துணி நெசவு, உலோகத் தொழில், இயந்திரத்தொழில், இரயில் வண்டிப் பொறிகள் செய்யும் தொழில் முதலிய பல தொழில் கள் சிறப்புற்று விளங்குகின்றன. உலகப் புகழ் பெற்ற கம்பள ஏற்றுமதித் தொழில் சிட்னியில்தான் மிகுதியாக நடைபெறுகிறது.

## மெல்பர்ன்

சிட்னிநகருக்கு அடுத்த பெருமையுடையது மெல்பர்ன் நகரமே. இது விக்டோரியா மாநிலத் தின் தலைநகராக விளங்குகின்றது. விக்டோரியா அரசியாரின் அமைச்சராக இருந்த மெல்பர்ன் பிரபு வின்பெயரால் இந்நகரம் அழைக்கப்படுகின்றது. இஃது யார்ரா ஆற்றின் கரையில் அழகுற அமைந் துள்ளது. இங்குள்ள நீரோடைகள் எழில் வாய்ந் தவை. இந்நகரத்து மக்கள் தொகை பதின்மூன்று லட்சமாகும்.

முதன் முதலில் கி. பி. 1854-இல் ஆஸ்திரேலியா வில் இரயில்பாதை மெல்பர்ன் நகரத்திற்கும் அதன் துறைமுகத்திற்கும் ஏற்பட்டது. அருகிலுள்ள பொன் சுரங்கங்களுக்கும், பண்ணைகளுக்கும், தொழிற்சாலைகளுக்கும் இரயில் அங்கிருந்து எப் போதும் ஓடிக் கொண்டிருக்கிறது. இந்நகரின் தட்பவெப்பம் உடலுக்குப் பொருந்துவதாகும். இங்கு மின்சார வசதியும் நீர் வசதியும் எளிதில் கிடைக்கின்றன.

மெல்பர்ன் இயற்கையெழிலும், செயற்கை நல

மும் வாய்ந்த நகரமாகும். இங்குள்ள பயிர்நூல் ஆராய்ச்சித் தோட்டங்கள் மிகச் சிறப்பானவை. ஏறக்குறைய ஆருயிரம் ஏக்கர் நிலங்கள் பூங்காவின் அமைப்புக்காகச் செம்மை செய்யப்பட்டுள்ளன. இந்நகரை அடுத்த குன்றுகள் இன்பச் செலவுக்கு மிகவும் பொருந்தியவை. நான் இங்குள்ள பல்கலைக் கழகக் கட்டிடம், சட்டசபை மன்றம், தொழில் கண் காட்சிக் கூடம் முதலிய இடங்களுக்குச் சென் றிருந்தேன். அவை ஆஸ்திரேலியரின் நாகரிக வளர்ச்சிக்குச் சிறந்த சான்றுகள் என்பதில் ஐய முண்டோ? மெல்பர்னிலிருந்து கோதுமை, பாற் பண்ணைப் பொருள்கள், பழங்கள் முதலியன வெளி நாடுகளுக்கு ஏற்றுமதியாகின்றன. ஆஸ்திரேலியா வில் நூற்றுக்கு முப்பத்தைந்து பங்குள்ள கம்பளம் மெல்பர்னிலிருந்துதான் ஏற்றுமதியாகின்றது.

## அடிலெய்ட்

தென் ஆஸ்திரேலியாவின் தலைநகரம் அடி லெய்ட் என்னும் நகரமாகும். நகரம் ஏற்படு வதற்கு முன் இவ்விடத்தைக் கி. பி. 1836-இல் சார்லஸ் ஸ்டர்ட் (Charles Sturt) என்பவரும் வில்லியம் லைட் என்பவரும் கண்டு பிடித்தனர். இந்நகர் செயின்ட் வின்செண்ட் விரிகுடாவின் கிழக்குப் பகுதியில் அமைந்திருக்கிறது. இதன் தெற்கே எழில்வாய்ந்த குன்றுகள் தோற்றமளிக் கின்றன; இதன் வடக்கே தாழ்ந்த நிலப்பகுதிகள் உள்ளன. இது கடல் போக்கு வரவுக்கும் நிலப் போக்கு வரவுக்கும் பெரிதும் வாய்ப்புள்ள துறை முகமாகத் திகழ்கின்றது.

அடிலெய்ட் நகரம் சதுரமான அமைப்புக் கொண்டது. தோட்டங்களும், பூங்காக்களும், காடு

களும் இந்நகரின் ஒவ்வோர் எல்லையிலும் காட்சி யளிக்கின்றன. இங்குள்ள டாரன்ஸ் (Torrens) என்னும் ஆற்றில் அணை கட்டப்பட்டுள்ளது. இதனால் பெரிய நீர்த்தேக்கம் பரந்த ஏரிபோலக் காட்சியளிக்கிறது. இங்குக் கம்பளத் தொழிற்சாலை களும் மட்பாண்டத் தொழிற்சாலைகளும் நிறைந் துள்ளன. அடிலெய்ட் துறைமுகத்திலிருந்து ஏற்று மதியாகும் பொருள்களின் மதிப்பு, ஆஸ்திரேலியா வின் முழு ஏற்றுமதி அளவில் நான்கில் ஒரு பங்கா கும். இங்குள்ள பல்கலைக் கழகக் கட்டிடம் சுரங்கத் தொழிற் பள்ளி, மாதாகோவில்கள் என்பன கண்டு மகிழத் தக்கன.

## பெர்த்

இது மேற்கு ஆஸ்திரேலியாவின் தலைநகரமா கும். இது ஆஸ்திரேலியாவின் தென்மேற்கே சுவான் என்னும் ஆற்றங்கரையில் அமைந் துள்ளது. இந்நகரம் கி. பி. 1856-இல் உருப் பெற்றது. இங்கு 'பெர்த்வாட்டர்' (Perth Water) என்னும் அழகிய ஏரி இயற்கையாக அமைந்திருக் கிறது.

இந்நகரத் தெருக்கள் மிகக் குறுகியவை. இது பழைய நகரமாதலின் குறுகிய தெருக்கள் இக்காலத் திலும் அழிவுறாமல் இருக்கின்றன. நான் இங்குள்ள மாளிகைகளுள் ஒன்றான செயின்ட் ஜார்ஜ் மாளிகைக் குச் சென்றேன்; அங்குள்ள வேலைத் திறனைக் கண்டு மகிழ்ந்தேன். ஏறக்குறைய ஆறாயிரம் ஏக்கர்ப் பரப் புள்ள பூங்காக்களுள் அரசர் பூங்காவே (King's Park) மிகப் பெரியது. இப்பூங்காவில் நான் அமர்ந்திருந்த போது பூமணங் கமழ்ந்த இனிய காற்றை உட்கொண்டேன்; பொழுது போவதே தெரி

யாமல் பல மணி நேரம் அங்கேயே இருந்தேன். அரசர் பூங்காவின் பரப்பு 1018 ஏக்கர் ஆகும். இது சுவான் ஆற்றங்கரையை ஒட்டி அமைந்துள்ளது. மேலும் இப்பேரூரில் சட்டசபை மன்றமும், பல் கலைக் கழகக் கட்டிடமும் பார்க்கத்தக்கவை. இது இரயில் பாதைகள் மிகுந்துள்ள தொழிற்சாலை நகர மாக விளங்குகின்றது.

## பிரிஸ்பேன்

குவீன்ஸ்லாந்து மாநிலத்தின் தலைநகரம் பிரிஸ் பேன் என்பது. மோர்டன் வளைகுடாவில் பாய் கின்ற பிரிஸ்பேன் என்னும் ஆற்றங்கரையில் இது அமைந்துள்ளது. பிரிஸ்பேன் ஆறு பள்ளமான நிலப் பகுதியில் ஓடுவதால் சிற்சில காலங்களில் வெள்ளப் பெருக்கு எடுத்துக் கரைகளை உடைக் கின்றது. ஒரு காலத்தில் இங்குக் கவர்னராயிருந்த சர். டி. எம். பிரிஸ்பேன் என்பவரின் பெயரால் இஃது அழைக்கப்படுகிறது. கி. பி. 1842-இல் பிரிஸ் பேன் ஒரு நகரமாகியது. பின்பு கி. பி. 1859-இல் குவீன்ஸ்லாந்தின் தலைநகரமாயிற்று.

இந்நகரில் மின்சார வசதியும், நீர்வளமும் மிகுதியாகக் கிடைக்கின்றன. இது சுகாதார முறை யில் சிறந்து விளங்கும் நகரமாகும். இது உழவு, மேய்ச்சல், சுரங்கத் தொழில்களுக்குப் பெயர் பெற்றது. இங்கு ஏறத்தாழ 680 தொழிற்சாலைகள் உண்டு. உணவுப் பொருள் உற்பத்தியும் துணி உற்பத்தியும் இங்கு மிகுதியாக நடைபெறுகின்றன. மேலும் மோட்டார் செய்யும் தொழில் இந்நகரத் தின் சிறப்புத் தொழிலாகும். இதன் இரயில் பாதை வடக்கே சர்க்கரைத் தொழில் நடைபெறும் துறை முகங்களோடும், தெற்கே சிட்னியோடும் இணைந்

துள்ளது. இதனால் இங்குத் தொழில் வளம் பெருகி யிருப்பது குறிப்பிடத் தக்கது. இங்கிருந்து கம் பளம், இறைச்சி, மாட்டுப் பண்ணைப் பொருள்கள், சர்க்கரை முதலியவை வெளிநாடுகட்கு ஏற்றுமதி யாகின்றன. பொதுவாகக் குவீன்ஸ்லாந்து மாநிலம் தொழில் வளத்தில் பிற்போக்கானது என்றே கூற லாம். ஆனால் அதன் தலைநகரான பிரிஸ்பேன் பிற நகரங்களுடன் போட்டியிடும் அளவுக்குத் தொழில் களில் சிறந்து விளங்குகின்றது.

## டவுன்ஸ்வில்லி

இந்நகரம் குவீன்ஸ்லாந்திலுள்ள இரண்டாம் சிறப்பு நகரமாகும். குவீன்ஸ்லாந்தின் வடபகுதிக்கு டவுன்ஸ்வில்லியே தலைநகரமெனக் கூறத்தகும் என்று ஆஸ்திரேலியர் கருதுகின்றனர். இந்நகர் ரோஸ்கிரீக் என்னும் ஆற்றங்கரையில் அழகுறத் திகழ்கின்றது. ரோஸ்கிரீக் ஆறு ஆழங் குறைந்தது. அதனால் இப்போது இயந்திர உதவியால் அஃது ஆழமாக்கப்பட்டு வருகின்றது. இங்குள்ள இரயில் பாதை, அருகிலுள்ள பொன், செம்பு முதலிய சுரங்கங்களோடு இணைந்துள்ளது. இதனால் இங்குப் பல தொழிற்சாலைகள் நிறுவப்பட்டுள்ளன.

## டார்வின்

ஆஸ்திரேலியாவின் வடக்கு மாநிலத்தின் தலை நகரம் டார்வின் எனப்படும். டார்வினுக்கும் சிட்னிக்கும் இடையே அறுநூறு மைல் நீளமுள்ள இரயில் பாதை செல்லுகிறது. கி. பி. 1869-இல் டார்வின் நகரம் ஏற்பட்டதென்று அந்நகர அதி காரிகள் என்னிடம் கூறினர். அங்கு இப்போது

ஆறுயிரம் மக்கள் வாழ்கின்றனர். டார்வினில் தனி யான சட்டசபை இல்லை. ஏனென்றால் அந்நகரம் உட்பட்ட வடக்குமாநிலம் ஆஸ்திரேலிய இணைப்பு அரசாங்கத்தின் நேர்பார்வையில் ஆளப்படுகின் றது. அங்குப் பெரும்பாலும் பிரிட்டிஷ் மக்களே வாழ்ந்து வருகின்றனர்.

**கான்பரா**

ஆஸ்திரேலியா நடு அரசாங்கத்தின் தலை நகரமே கான்பரா என்பது. ஒரு காலத்தில் புதிய தென்வேல்ஸ், விக்டோரியா ஆகிய இருமாநிலத் தாரும் தத்தம் நகரங்களே ஆஸ்திரேலியாவின் நடு அரசாங்கத்தின் தலைநகரமாக வேண்டுமென்று விரும்பினர். ஆயின் இருவர்க்கும் பொதுவாகக் கான்பரா தலைநகரமாக்கப்பட்டது. கான்பராவின் வானவூர்தி நிலையம் மிகக் குறுகியதே. இங்குச் சிறப்புக்குரிய கட்டிடங்களும், தொழில் துறைகளும் இல்லை. ஆயின், அரசியல் தலைநகரமாக இது சிறப்புப் பெறுகின்றது. ஒரு அரசாங்கத்தினரால் இஃது ஆளப்படுகின்றது. வெளிநாட்டுத் தூதர் நிலையமும், உயிர்நீத்த வீரர்க்குரிய நினைவு மண்டப மும், இணைப்பு அரசாங்கச் சட்டசபைக் கட்டிட மும் இங்குக் காணத்தக்கவை. இப்போது பதினே ழாயிரம் மக்கள் கான்பராவில் வாழ்கின்றனர். காலப்போக்கில் கான்பரா பெரியநகரமாகும் என வும், அதற்காக இப்பொழுதே பாதைகளும், குடி தண்ணீர், மின்சாரம் முதலிய வசதிகளும் ஏற்படு கின்றன எனவும் இங்குள்ள அதிகாரிகள் என் னிடம் கூறினர்.

# 14. இருபதாண்டுகளில் ஆஸ்திரேலியா

## உலகச் சூழ்நிலை

கி. பி. 1919-முதல் 1939-வரையுள்ள 20 ஆண்டுக் காலம், உலகின் ஒவ்வொரு நாட்டு வரலாற்றிலும் குறிப்பிடத்தக்கது. அவ்விடைக் காலத்தில் இரண்டு உலகப் போர்கள் நடந்தன. அவற்றால் உலகச் சூழ் நிலை மாறுபாடு அடைந்தது; பொருளாதாரம், சமூகம், அரசியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் புதிய மாற்றங்கள் ஏற்படலாயின. இன்று உலகில் எந்த நாடும் தனக்குரிய தனித்த சூழ்நிலையில் உலகத் தொடர்பற்று இயங்க இயலாது. ஒவ்வொரு நாட் டுச் சூழ்நிலையையும் உலகச் சூழ்நிலை கவர்ந்து மாற்றம் விளைவிக்கும் என்பது வரலாற்றில் நாம் காணும் கண்கூடான செய்தியாகும். புதிய கண்ட மாக விளங்கும் ஆஸ்திரேலியா இவ்வுண்மைக்கு விதி விலக்கு ஆகாது. இருபெரும் உலகப் போர்கள் ஏற் பட்ட தன் விளைவால் ஆஸ்திரேலியா பல துறைகளில் புதுமை பெற்றுப் பொலிவுறத் தொடங்கியது. சீரும் செல்வமும் பெற்ற நாடுகள் சில போர் விளைவால் ஏழை நாடுகளாவதுண்டு. உலக அரங்கில் செல்வாக் கற்ற நாடுகள் சில தலைநிமிர்ந்து பேரரசுகளாகத் துலங்குவதும் உண்டு. ஆஸ்திரேலியா தொன்மைச் சிறப்பும் புதுமைச் செல்வமும் பெறாத நாடு. அது போர்க் காலத்தில் செல்வம் கொழித்த திருநாடாக விளங்கியது என்பதை 20 ஆண்டுக் காலத்து வர லாற்றால் நாம் அறியலாம்.

போர்விளைவே அன்றிப் புரட்சி விளைவும் அக்

காலத்தில் ஏற்பட்டது. கி. பி. 1917-இல் நடந்த ரஷ்யப் புரட்சி, வரலாற்றில் பெரியதொரு திருப்பு மையமாக அமைந்தது. பிற உலக நாடுகளும் தத்தம் சூழ்நிலையில் முன்னேறுவதற்கு அவாக் கொண்டன. அண்டை நாடுகளின்மேல் பகைமை கொண்டு தாமே உயர்வதற்கும் சில நாடுகள் முயன்றன. கி. பி. 1929-இல் உலகமெங்கும் பொருளாதார முட்டுப்பாடு நேர்ந்தது. கி. பி. 1931-இல் ஜப்பான் மஞ்சூரியாவை முற்றுகையிட்டது. அப்போது உலக மன்றத்தில் கூடிய நாடுகள் பலவும் ஜப்பான் செய்த முற்றுகைச் செயலைக் கண்டித்துத் தீர்மானம் நிறைவேற்றின. இத்தாலியில் அரசாங்கத்தை நடத்திய பாஸிஸ்ட் கட்சியினர் ஒன்றுகூடி ஜெர்மனியில் அரசு நடத்திய நாஜிக் கட்சியாரோடு உடன்படிக்கை செய்து கொண்டனர். அதன்படி உலகத்தைத் தங்கள் குடைக்கீழ் ஆளவேண்டும் என்று பாஸிஸ்டுகளும், நாஜிகளும் முனைந்தனர். கி. பி. 1935-அக்டோபரில் இத்தாலி அபிசீனியாவை முற்றுகையிட்டது. அதனை அடுத்து ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான் ஆகிய மூன்று நாடுகளும் தமக்குள் ஒரு கூட்டணி அமைத்துக்கொண்டு உலகப்போரை மூட்டின; அவற்றின் கூட்டணிக்கு எதிராகப் பிரிட்டன், அமெரிக்கா, பிரான்ஸ், ரஷ்யா, ஆஸ்திரேலியா ஆகிய நாடுகள் ஒருங்கு சேர்ந்தன. பின்னர் ஏற்பட்ட போரின் விளைவால் பாஸிஸ்டுகளும், நாஜிகளும் பெருந்தோல்வி அடைந்தனர். பிரிட்டனுடன் துணைநின்ற ஆஸ்திரேலியா தனது நிலையில் உயரத் தொடங்கியது. ஆஸ்திரேலியாவின் கம்பளி, கோதுமை, வெண்ணெய், பழங்கள், உலோகங்கள் முதலியன உலகச் சந்தையில் பெரிதும் விற்பனையாயின. இங்ஙனம் போர் விளைவால் பொருளாதார ஏற்

றம் அடைந்த நாடுகளுள் ஆஸ்திரேலியாவைச் சிறப்பாகக் குறிப்பிடலாம்.

உலகச் சூழ்நிலைக்குத் தக்கபடி ஆஸ்திரேலியர் தமது நாட்டில் பொருளாதார ஏற்றத்தை அமைத்துக்கொண்ட வரலாறு நாம் படித்துணரத்தக்கது. அவர்கள் மேற்கொண்ட வழிமுறைகளுள் சிலவற்றை இங்கே காண்போம்.

## ஓய்வுபெற்ற போர் வீரர்

உலகப்போர்கள் நடந்து முடிந்தவுடன், பல நாடுகளில் போர்வீரர்கள் வாழ்க்கை பெருந்துன்பத்திற்கு இலக்காயிற்று. இந்தியப் போர்வீரருள் சிலர், போர் ஓய்ந்த அமைதிக் காலத்தில் வாழவகையின்றித் தமது வாழ்வைத் துன்பியலாக முடித்துக் கொண்ட செய்திகள் நாம் அறிந்தவையே. வேலை தேடிக் கொடுக்கும் நிலயத்தாரும், அரசியலாரும் கண்டு திகைக்குமாறு போர்வீரர் பெருங்குழுவினராகத் திரண்டனர். கிராமநலத் திட்டங்களிலும், மோட்டார் நிலயங்களிலும், தொழிற்பள்ளிகளிலும், கடல் துறைகளிலும் முயன்று வேலை தேடிப் பெற்ற இந்திய வீரர் பலருடைய வாழ்க்கையை நாம் கண்டும் கேட்டும் இருக்கிறோம். ஆஸ்திரேலியாவில் அந்நாட்டுப் போர்வீரர் பண்ணை வாழ்க்கையில் ஈடுபட்டது பெரிதும் வியப்பிற்குரியது. விக்டோரியா, புதிய தென்வேல்ஸ், தென் ஆஸ்திரேலியா ஆகிய மாநிலங்களில் ஓய்வு பெற்ற போர்வீரர் பண்ணைகள் ஏற்பட்டன. காய்கறிப் பண்ணை, பாற் பண்ணை முதலிய பண்ணைகள் போர்வீரர்களால் செம்மையாக நடத்தப்பட்டன. பண்ணை வாழ்வின் அமைப்போடு தொழிற்சாலை அமைப்பும் இங்கே குறிப்பிடத்தக்கது. தொழிற்சாலைகளில்

பற்பல இயந்திரப் பொருள்கள் செய்யப்பட்டு உலக நாடுகளுக்கு ஏற்றுமதியாயின. அங்கும் ஓய்வு பெற்ற போர்வீரர் பணியாற்றினர்.

## முப்பொருள் உண்மை

ஆஸ்திரேலியர் முப்பொருள் உண்மை தெரிந்தவர். அவர்கள் கண்ட முப்பொருள் யாவை? மக்கள், பணம், சந்தை என்னும் மூன்றையும் ஆஸ்திரேலியர் போற்றிய முப்பொருள் என்று குறிப்பிடலாம். உலகில் மக்கட் செல்வத்திற்கு ஈடான செல்வம் யாதொன்றுமில்லை. 'உயிர் வாழ்க்கையில் மக்களே மகுடம் போன்றவர்' என்பது விவிலிய வாக்கு. மக்களை உயர்திணையாக வகுத்துத் தமிழ்நூல்களும் கூறுகின்றன. மக்கட் செல்வம் இனிது வாழ்ந்திருக்கப் பொருட் செல்வம் மிகவும் இன்றியமையாதது. தமிழர் கண்ட அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றனுள் நடுவண் அமைந்தபொருளே ஆஸ்திரேலியருக்கு இரண்டாம் சிறப்புக்குரிய செல்வமாகும். பொருட் செல்வம் ஓரிடத்தில் குவிந்துகிடப்பதன்று. பலருடைய கைகளில் அது வழங்கிவருதல் வேண்டும். அவ்வாறு பொருள் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் செல்வதற்கு வாணிகத்துறை வேண்டும். வாணிகத் துறை நிலைபெறச் சந்தைகள் அமைதல் வேண்டும். எனவே, பொருட் செல்வத்தை அடுத்துச் சிறப்புக் குரியது சந்தைக்கூடம் என்பதை நாம் தெரிந்து கொள்கிறோம். மேற்குறிப்பிட்ட மக்கள், பணம், சந்தை ஆகிய முப்பொருள் உண்மையைத் தெரிந்த ஆஸ்திரேலியர் பொருளாதாரம், சமூகம், அரசியல் ஆகிய மூன்று துறைகளிலும் சிறந்து விளங்கத் தலைப்பட்டனர்.

## மக்கட் செல்வம்

மக்கள் தொகை பெருகவேண்டும் என்பது ஆஸ்திரேலிய அரசாங்கத்தார் பெருவிருப்பமாகும். அதன்படி அவர்கள் புதிய குடியேற்றங்கள் ஆண்டு தோறும் நிகழ இசைவுதந்தனர். கி. பி. 1929–1939 இடைப்பட்ட பத்தாண்டுக் காலத்தில் $5\frac{1}{2}$ லட்சம் மக்கள் பெருகினர் என்று கண்டபோது, ஆஸ்திரேலிய அரசாங்கத்தார் மகிழ்வெய்தினர். எவ்வாற்றுனும் மக்கள் தொகை அருகிவரல்கூடாது என்பதை நினைவிற்கொண்டு அவர்கள் செயலாற்றி வந்துள்ளனர்.

## பொருட் செல்வம்

ஆஸ்திரேலியா தானே தனக்குரிய பொருளைக் கொண்டு முன்னேறும் வழிபெற்றிலது. எனவே, அது பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பொருளுதவியை எதிர்பார்க்க நேரிட்டது. கி. பி. 1922-இல் பிரிட்டிஷ் அரசாங்கம் வெளியிட்ட பிரிட்டிஷ் பேரரசின் குடியேற்றச் சட்டங்கள் காலனி நாடுகளுக்குப் பொருளுதவி அளிப்பதற்கு இடம் கொடுத்தன. அக்குடியேற்றச் சட்டங்களுக்கு ஆஸ்திரேலியா இணங்கிச் செயலாற்றியது. ஆண்டுதோறும் இலண்டனிலிருந்து கிடைத்த பிரிட்டிஷ் பணம் ஆஸ்திரேலியாவில் பொருளாதாரத்தைச் சீர்படுத்தியது.

## சந்தைக் கூடம்

ஆஸ்திரேலியாவில் விளைந்த பழங்களும், பாற்பண்ணைப் பொருள்களும், சர்க்கரையும், பிறவும் பிரிட்டனுக்குப் பெரிதும் ஏற்றுமதியாயின. ஆஸ்திரேலியப் பொருளின் சிறப்புக்களை அறிந்த பிற

நாட்டவரும் அவற்றை வாங்கிப் பயனடைய விழைந்தனர். கி. பி. 1929-இல் உலகச் சந்தையில் ஆஸ்திரேலியாவினின்று ஏற்றுமதியாகி விற்கப்பட்ட பொருள்கள் எண்ணிறந்தவை என்றும், அவற்ருல் ஆஸ்திரேலியா அடைந்த வருவாய் மிகப்பெரிது என்றும் அதன் வரலாறு கூறுகின்றது.

## காமன்வெல்த் நடுநிலே அறமன்றம்

ஆஸ்திரேலியாவின் பண்ணைச் சீர்த்திருத் தங்கள் படிப்படியாக வளர்ச்சி பெற்று வந்துள்ளன. கி. பி. 1925, 1928, 1929 ஆகிய ஆண்டுகளில் நடந்த தொழிலாளர் வேலே நிறுத்தங்கள் ஆஸ்திரேலியா வில் விழிப்பை உண்டாக்கின. பண்ணையாட்கள் கூலி உயர்வு மறுக்கப்படாமல் அளிக்கப்பட்டது. கி. பி. 1904-இல் ஏற்பட்ட காமன்வெல்த் நடுநிலே அறமன்றம் பல்லாண்டுகளாக நன்கு செயலாற்றி வந்தது. போர்க்காலங்களிலும், போர் ஓய்ந்த அமைதிக்காலங்களிலும் அவ்வறமன்றம் தொழி லாளர் நலனே உயர்த்தப் பாடுபட்டது. ஆஸ்திரேலி யாவின் இருபது ஆண்டு வாழ்வில் அவ்வறமன்றத் தின் தொண்டு குறிப்பிடத்தக்கது என்னலாம்.

## ஒட்டாவா மாநாடு

கி. பி. 1932-இல் ஆஸ்திரேலியாவில் வேலே யில்லாத்திண்டாட்டம் பரவியது. தொழிற்சங்க உறுப்பினருள் நூற்றுக்கு முப்பதுபேர் வேலே யின்றித் துன்புற்றனர். அப்போது ஒட்டாவா நகரில் ஒரு பொருளாதார மாநாடு கூடியது. அதற்கு ஆஸ்திரேலிய அரசாங்கம் தனது உறுப் பினரை அனுப்பியது. அந்த மாநாட்டில் பிரிட்டிஷ் நாட்டுப் பொருள்களின்மேல் வரி குறைக்கப்பட

வேண்டும் என்று தீர்மானம் நிறைவேறியது; மேலும் சிற்சில வாணிக உடன்படிக்கைகளும் கையெழுத்தாயின. ஒட்டாவா மாநாடு பொருளாதார ஏற்றத்தை ஓரளவு விளைவித்தது என்று கூறுதல் மிகையன்று. கி. பி. 1933 முதல் 1939 வரை ஆஸ்திரேலியாவில் பொருளாதார உயர்வு ஏற்பட்டது. ஏற்றுமதிப் பொருள்களின் விலைகள் உயர்ந்தன. ஆஸ்திரேலியாவின் நடு அரசாங்கமும் காமன்வெல்த் வங்கியும் ஒன்றுபட்டுச் செயலாற்றத் தொடங்கின. பொதுத்திட்டங்களுக்குச் செலவாகும் பெருந்தொகையைக் காமன்வெல்த் வங்கி கொடுத்துதவியது. ஆங்காங்கே பொதுத் திட்டங்கள் செயலாக்கப்பட்டமையால், உற்பத்தியும் வருவாயும் பெருகின; வேலை பெறும் வாய்ப்புகள் கிடைத்தன. தனிப்பட்டோர் வாணிகத்திலும் உயர்வு காணப்பட்டது. பெரிய இயந்திரத் தொழிற்சாலைகள் பல இடங்களில் அமைக்கப்பட்டன. இரும்பு, எஃகுப் பொருள்கள் கி. பி. 1934-இல் முன்னைக் காட்டிலும் பன்மடங்கு உற்பத்தி செய்யப்பட்டன. துணி, இரசாயனப் பொருள், பொறியியற் பொருள், மோட்டார்ப் பொருள் முதலிய பலவும் தொழிற்சாலைகளில் கணக்கின்றிச் செய்யப்பட்டன. இவ்வாறு ஒட்டாவா மாநாட்டின் பின்னர் ஏழாண்டுகளில் ஆஸ்திரேலியா தொழில் துறையில் பெரிதும் வளர்ச்சி பெற்றது என்பது தெளிவாகும்.

## சமுதாயச் சீர்திருத்தம்

கி. பி. 1914-க்கு முன்னர் நடந்த சமுதாயச் சீர்திருத்தங்களைப்போலக் கி. பி. 1919–1939-இல் நடைபெறவில்லை. குவீன்ஸ்லாந்து மாநிலம் கி. பி. 1923-இல் வேலையில்லாத்திண்டாட்ட இன்சூரன்ஸ்

திட்டத்தைச் செயற்படுத்தியது; புதிய தென் வேல்ஸ் மாநிலம் கி. பி. 1927-இல் குழந்தை நலத் திட்டத்தை நிறைவேற்றியது. ஜெனிவாவில் கூடிய உலகத் தொழிற் சங்க மாநாட்டிற்கு ஆஸ்திரேலிய அரசாங்கம் தனது உறுப்பினரை அனுப்பியது. தொழிற் சீர்திருத்தங்களையும் சமுதாயச் சீர் திருத்தங்களையும் ஜெனிவா மாநாடு ஆராய்ச்சி புரிந்தது. ஆயின், ஜெனிவா மாநாடுகளால் யாதொரு சீர்திருத்தமும் ஆஸ்திரேலியாவில் ஏற்பட வில்லை.

## உடல், கல்வி, சமூக நலங்கள்

இருபதாண்டுக் காலத்தில் சமுதாயச் சீர்திருத் தங்கள் ஏற்படாவிடினும் பொதுநலத் தொண்டுகள் நடைபெற்றன. உடல் நலம், கல்வி நலம், சமூக நலம் ஆகிய மூன்றும் தொண்டர்படையின் உதவி யால் பரந்த அளவில் செய்யப்பட்டன. உடல் நலம், முதுமைப் பருவத்தினர் பெறும் அரசாங்க உதவிப் பணம், மருத்துவமனைச் செலவு ஆகிய பலவற்றிற்கும் மிகுதியாகப் பொருள் செலவழிக்கப் பட்டது. கி. பி. 1914 முதல் கி. பி. 1939 வரை ஐம்பது லட்சம் பவுன் செலவுத் தொகை மூன்றரைக் கோடி இலட்சமாகப் பெருகியது. கல்வித் துறையி லும் ஆஸ்திரேலிய அரசாங்கம் பெருந்தொகை செலவிட்டது. சமூக நலத் துறையிலும் ஆஸ்தி ரேலியா முன்னேற்றம் அடைந்தது. உலகில் சாவு எண்ணிக்கை மிகக் குறைந்த நாடு ஆஸ்திரேலி யாவே. குழந்தைச் சாவு எண்ணிக்கையும் மற்ற நாடுகளைவிட ஆஸ்திரேலியாவில் குறைவே என்பது குறிப்பிடத்தக்கது. ஆஸ்திரேலியர் ஒவ்வொரு வருக்கும் தேவையான வருவாயும் உடலுக்குப்

பொருந்திய தட்பவெப்பமும், பொதுநலத் தொண்டும் சமூக நலத் துறையைச் செப்பஞ்செய்யக் காரணங்களாக அமைந்தன என்று கூறலாம்.

## உலகநாடுகளுடன் ஒற்றுமைத் தொடர்பு

ஆஸ்திரேலியா எப்பொழுதும் உலகநாடுகளுடன் ஒற்றுமையாக வாழ விரும்பும் நாடாகும். கி. பி. 1919 முதல் கி. பி. 1939 வரை ஆஸ்திரேலியாவுக்கு உலகத் தொடர்பு நெருங்கிய நட்பு முறையில் ஏற்பட்டது. உலகமன்றத்தில் ஆஸ்திரேலியா இடம் பெற்று வந்தமை இதற்குச் சான்ருகும். கி. பி. 1923-இல் ஜப்பானில் பெரிய நிலநடுக்கம் தோன்றியது. அதனுல் டோக்கியோ நகரத்தின் பெரும் பகுதி அழிவுற்றது. அப்போது ஆஸ்திரேலியர் அல்லற்பட்டு வருந்திய ஜப்பானியருக்கு வேண்டிய உதவிகள் அளித்தனர். கி. பி. 1936-இல் இத்தாலி அபிசீனியாவைத் தாக்கிக் கைப்பற்றியது. இத்தாலியும் ஜெர்மனியும் ஒன்று சேர்ந்து ஸ்பெயின் நாட்டு மக்களரசைக் கவிழ்க்கத் திட்டமிட்டன ; அதன்படி தத்தம் நாடுகளில் வரிப்பளுவை மக்கள்மீது சுமத்தின ; போர்க் கருவிகளைச் செய்வதில் நாட்டுச் செல்வத்தைச் செலவிட்டன. அப்போது ஆஸ்திரேலியா அரசாங்கம் வரிகளைக் குறைத்துக் கொண்டிருந்தது ; போர்க் கருவிகளைச் செய்வதில் சிறிதும் கருத்துச் செலுத்தாமல் இருந்தது. இதனுல் ஆஸ்திரேலியா உலக அமைதியையும், தன் நாட்டு அமைதியையும் பாதுகாக்க முனைந்துநின்ற திறம் தெளிவாகின்றது அன்ருே ?

# 15. தாயகஉறவும் கலைவளர்ச்சியும்

## குடியேற்றக் கொள்கை

பிரிட்டிஷ் நாட்டின் குடியேற்றக் கொள்கைப் படியே ஆஸ்திரேலியாவின் அரசியல் வாழ்வு நடைபெறுகிறது. கி. பி. 1855-இல் ஆஸ்திரேலியாவின் அரசியல் சட்டதிட்டங்கள் உருவாக்கப் பட்டன. ஆண்டுதோறும் அவை சில மாறுபாடுகளுக்கு இலக்காயின. கிரேயின் ஆட்சிக் காலத்தில் பிரிட்டனுக்கும் ஆஸ்திரேலியாவுக்கும் இடையே சமத்துவக் கொள்கை நிலவியது. இந்தச் சமத்துவக் கொள்கையினை எல்லாப் பிரிட்டிஷ் அரசியல் அறிஞர்களும் ஒப்புக் கொள்ளவில்லை. டிஸ்ரேலியின் ஆட்சிக் காலத்தில் சமத்துவக் கொள்கை மறுக்கப்பட்டது. தனியரசு உரிமையினைக் குடியேற்ற நாடுகளுக்குக் கொடுப்பது தீங்கு விளைவிக்கும் எனவும், வேற்றுமையை வளர்க்கும் எனவும் டிஸ்ரேலியும் அவரைச் சார்ந்த அமைச்சர்களும் கருதினர். தாயக நாடான பிரிட்டனுடன் குடியேற்ற நாடான ஆஸ்திரேலியா இணைந்து ஒற்றுமையுடன் வாழவேண்டும் என்ற கொள்கையே முடிவில் வலிமை பெற்றது என்று கூறலாம்.

## மக்கள் கருத்து

அரசியல் வாதிகளுக்கிடையே குடியேற்றக் கொள்கைகளில் கருத்து வேறுபாடு இருப்பினும், தாயக மக்களும் குடியேற்றநாட்டு மக்களும் கருத்து ஒருமித்து வாழவே விரும்புகின்றனர். அன்பு என்னும் இணைப்புச் சங்கிலி அவர்கள் இருவரையும் ஒருங்கு வாழச் செய்கின்றது. ஆஸ்திரேலியாவின்

மக்கள் தொகையின் பெரும்பகுதி பிரிட்டிஷ் மக்கள் தொகையே என்று கூறுதல் மிகையாகாது. வரலாற்றிலும் மனவியலிலும் இருநாடுகளும் இணைந்தே காணப்படுகின்றன. ஆஸ்திரேலிய அரசியல் சட்ட திட்டங்களில் பெரும்பாலன, பிரிட்டிஷ் நாட்டைப் பார்த்தே அமைக்கப்பட்டுள்ளன ; பற்பல அரசியற் பெயர்கள் பிரிட்டிஷ் மூலத்தையே பின்பற்றி அளிக்கப்பட்டுள்ளன. இத்தகைய நட்புறவிற்குக் காரணம் மக்கள் கருத்து ஒப்புமையே என்று கூறலாம்.

## குடியேற்ற நாடுகளின் மாநாடுகள்

அவ்வப்போது தாயக நாட்டுடன் குடியேற்ற நாடுகள் அரசியல் தொடர்பு ஏற்படுத்தும் வகையில் பல மாநாடுகள் கூட்டப்படுகின்றன. கி. பி. 1887-இல் குடியேற்ற நாடுகளின் முதல் மாநாடு கூடியது. அதன் பின்னர் கி. பி. 1897-இல் இரண்டாவது மாநாடும், கி. பி. 1902, 1907, 1911 ஆகிய ஆண்டுகளில் முறையே மூன்று மாநாடுகளும் நடந்தன. மாநாடுகளில் பிரிட்டிஷ் அறிஞர்களும் ஆஸ்திரேலிய அறிஞர்களும் ஒன்றுகூடிப் பேசி, இருநாடுகளுக்கும் இடையே நெருங்கிய உறவும், ஒத்துழைப்பும் நிலவப் பாடுபட்டனர்.

## கவர்னர்ஜெனரல் பதவி

இவ்வாறு பாடுபட்டதன் பயனாக, கி. பி. 1931-இல் ஆஸ்திரேலியாவில் கவர்னர்ஜெனரல் பதவியை ஆஸ்திரேலியர் ஒருவரே ஏற்றுக்கொண்டார். அவரே சர் ஐசக் ஐசக்ஸ் என்பவர். ஐந்தாண்டுகளுக்குப் பின்னர் அவர் பதவியினின்று விலகியபோது, கௌரி என்ற மற்றொரு ஆஸ்திரேலியர் கவர்னர்ஜெனரலாகப் பதவி யேற்றார்.

இவ்வாறு ஆஸ்திரேலியர் தமது தாயக நாடான பிரிட்டனுடன் உரிமைகொண்டு வாழ்வதற்கு வழி யமைத்துக் கொண்டனர்.

## வாணிகத் தொடர்பு

தாயகத்துடன் கொண்ட அரசியல் தொடர்பைப் போலவே, வாணிகத் தொடர்பும் சிறந்து விளங் கியது. பிரிட்டிஷ் நாட்டுப் பொருள்கள் மலிந்த விலைக்கு ஆஸ்திரேலியாவில் விற்பனை செய்யப் பட்டன. மற்ற நாட்டுப் பொருள்களின்மீது விதித்த வரிப் பணத்திலும் சற்றுக் குறைந்த வரிப்பணமே பிரிட்டிஷ் பொருள்களுக்கு விதிக்கப்பட்டது. கி. பி. 1919-1939 வரையுள்ள காலத்தில் பிரிட்டிஷ் குடி யேற்ற நாடுகளின் வரலாறுகளைக் காணும்போது, தாயகத்திற்கும் ஆஸ்திரேலியாவுக்கும் மிகுந்த வாணிகத் தொடர்பு இருந்த உண்மையைத் தெளி வாக உணரலாம்.

## வரலாறும் மரபும்

பிரிட்டிஷ் வரலாறே ஆஸ்திரேலிய வரலாறு என்று கூறுதல் பொருத்தமாகும். பிரிட்டிஷ் நாட்டு மரபுகளே ஆஸ்திரேலியாவில் பெரும்பாலும் வழங்கி வருகின்றன. ஆஸ்திரேலியாவின் தட்பவெப்பம், வாழ்வியல் அமைப்பு ஆகியவற்றிற்குத் தக்கவாறு சிற்சில தனிப் பண்புகள் ஆஸ்திரேலியரிடம் காணப் படுகின்றன. புதுமை காணும் வேட்கையில் ஆஸ்தி ரேலியர் குறைந்தவரல்லர். அவர்கள் ஆங்கில நாட்டு இலக்கியங்களைப் பெரிதும் போற்று கின்றனர்; தமக்கெனத் தனி இலக்கியங்களையும் படைத்துக் கொள்வதில் பேரார்வமுடையவராக

இருக்கின்றனர். எனவே, ஆஸ்திரேலியருடைய வரலாறு பிரிட்டிஷ் வரலாற்றுடன் ஒன்றுபட்டிருப் பினும், அவர்தம் இலக்கிய மரபு தனிவழி மரபாகவே காட்சியளிக்கிறது.

## ஆஸ்திரேலியர் இலக்கியம்

உலகில் ஒவ்வொரு நாட்டிலும் அதற்கெனத் தனியிலக்கியங்கள் தோன்றுவது உண்டு. அவ் விலக்கியங்கள் தாம் பிறந்த நாட்டளவில் நின்று வாழ்வின் பொன்றுத்துணையாக அமைகின்றன. அவை உலகம் அளாவிப் பரவாவிடினும், தாய் நாட்டு முன்னேற்றத்திலும் வரலாற்றிலும் பண் பாட்டிலும் தக்க பெருந்துணையாக நிற்பன என்பதை எவரும் மறுக்க இயலாது. ஒவ்வொரு நாட்டிலும் 'உலக இலக்கியம்' எனப் போற்றத் தகும் வகையிலும் சிற்சில உயர்ந்த இலக்கியங்கள் தோன்றுவதும் உண்டு. ஒரு நாட்டில் பிறந்த எல்லா இலக்கியங்களும் உலக இலக்கியங்களாக மிளிர முடியா. சிற்சில, தாய்நாட்டுப் பற்றையும் பண்பாட்டையும் விளக்குவனவாக அமைந்து விடுதல் இயல்பு. அப்போது தாய்நாட்டுப் பண்பில் உலகப் பண்பு வளர்ச்சியை இணைத்துக்காண்பதே இலக்கிய ஆராய்ச்சி முறையாகும்.

மேற்கூறியாங்கு, ஆஸ்திரேலியாவில் தோன் றிய இலக்கியங்கள் பெரும்பாலனவும் அந்நாட்டுப் பண்பில் ஊறியவையே. உலகமெல்லாம் அறியும் அளவில் இலக்கிய ஆசிரியர்கள் ஆஸ்திரேலியாவில் இல்லையெனக் கூறலாம். நமது தமிழ் நாட்டுச் சங்க இலக்கியங்களை நாம் இங்கே ஒப்பிட்டுப் பார்த்தல் மிக்க பயனைத்தரும். சங்க இலக்கிய ஆசிரியர் களான கோவூர்கிழாரையும், பெருங்கோப் பெண்

டையும், கடலுள் மாய்ந்த இளம்பெரு வழுதியையும் பற்றிக் கோலரிட்ஜ் அறியவில்லை; பிரௌனிங் ஒன்றுமே உரைக்கவில்லை; கதே என்ற உலகப் பேராசிரியரும் தமது கட்டுரைகளில் குறிப்பிட வில்லை. பிற நாட்டு இலக்கியத்திறனாய்வாளர் அறிந்து உணரத்தக்க வகையில் நமது சங்க காலப் புலவர்கள் இல்லையென்பது நாம் ஒப்பத்தகுந்த உண்மையாகும். ஆஸ்திரேலியப் புலவர்களும் அதே நிலையில் அமைந்தவர் என்று கூறலாம்.

## கதை இலக்கியம்

ஹென்றி கிங்ஸ்லி என்ற தொடர் கதையாசிரியர் 'ஜாபரி காமிலின்' என்ற கதையைக் கி. பி. 1859-இல் இயற்றினார். மார்கஸ் கிளார்க், ஹென்றி லாசன், லூயிஸ் பேக் முதலிய கதையாசிரியர்களும் ஆஸ்திரேலிய இலக்கிய வரலாற்றில் குறிப்பிடத் தக்கவர்.

## கவிதை இலக்கியம்

ஆஸ்திரேலியாவில் பருவ மழை தவறுதல் உண்டு; வான்பொய்த்தமையால் வற்றாத ஆறு களும் நீரின்றிப் போதல் உண்டு. ஆயின், கவிதை மழை எப்போதும் பெய்துகொண்டிருக்கிறது; புலமைப் பூங்காவில் எழில்நிறைந்த கவிதை மலர் கள் பூத்துக்குலுங்கியபடியே இருக்கின்றன. கெண்டால் என்ற ஆஸ்திரேலியக் கவிஞர் (1841—82) பண்ணிசைவல்ல பாவலர். கார்டன் (Gordon) என்ற ஆஸ்திரேலியக் கவிஞர் (1833—70) குதிரை வீரராக ஆஸ்திரேலியாவில் குடியேறி வாழ்க்கை நடத்தினார்; ஆட்டு இடையர்களிடமும் பரதவரிட

மும் பழகினர் ; கனவு காணும் இயல்புடையவராகிப் பல கவிதைகளை இயற்றினர். அவர் போர்ப் பள்ளியில் கல்வி பயின்றவர் ; எனவே, அவர் பாடிய சில பாடல்கள் குதிரைப் போரைக் குறித்த நாடோடிப் பனுவல்களாக அமைந்துள்ளன. பிரண்டன் ஸ்டீபன்ஸ் (Brunton Stephens) என்ற மற்ருெரு கவிஞர் (1835—1901) அரசாங்க உத்தியோகத்தில் இருந்தார் ; அவர் இத்தாலிக் கவி மன்னரான தாந்தேயைக் (Dante) குருவாகப் போற்றி வந்தார். ' ஆஸ்திரேலிய அரசு ' என்ற பொருளில் நாட்டுப் பற்றுப் பாக்களை இயற்றியுள்ளார். ஆண்டுரு பேட்டர்சன் (Andrew Paterson) என்ற புகழ் பெற்ற கவிஞர் ' பனியாற்றிலிருந்துவந்த மனிதன் ' என்ற அழகு மிக்க கவிதையைப் பாடியுள்ளார். ஹென்றிசைன் பாடிய ' ஆஸ்திரேலியாவின் விண் மீன் ' என்ற கவிதை அந்நாட்டில் பலராலும் படித்துப் பாராட்டப்படுகிறது.

## ஓவியக்கலை

கதை, கவிதை, ஆகிய இலக்கியக் கலையில் சிறப்புப் பெற்றுள்ள ஆஸ்திரேலியா, ஓவியக்கலையிலும் நிகரற்று விளங்குகிறது. ஓவியக்கலைக்குத் தக்க இயற்கைச் சூழ்நிலை ஆஸ்திரேலியாவில் அமையவில்லை என்று சிலர் குறைகூறுவது உண்மையாகாது. என்சைக்கிளோபீடியா பிரிட்டானிக்காவில், ஆஸ்திரேலியாவின் இயற்கைக் காட்சியமைப்பு ஓவியப்புலமையைத் தூண்டிவிடும் திறம் பெற்றதன்று என்று எவரோ எழுதிவைத்திருப்பது பொருந்தாது. காவியப் புலவரையும் ஓவியப் புலவரையும் ஒருங்கே கவரத்தக்க முதற்பொருளும் கருப்பொருளும் ஆஸ்திரேலியாவில் அமைந்துள்

என. அழகுக்கலை ஆஸ்திரேலியாவில் மிளிர்வதை அந்நாட்டில் பழகியறிந்தவரே உணரக்கூடும். பற்பல ஓவியர் குழுக்களும் இக்காலத்தில் ஆஸ்திரேலியாவின் அழகியற்கையில் படிந்து போற்றி வருவது உலகறிந்த உண்மையாகும். ஆர்தர் சிரீட்டன் (Arthur Streeton), ஜார்ஜ் லாம்பர்ட் (George Laumbert) ஆகிய ஆஸ்திரேலிய நாட்டு ஓவியப் புலவர்கள் வரைந்த ஓவியங்கள் இணையற்ற அழகுடன் கலைக்காட்சிகளில் இன்றும் விளங்குகின்றன.

# 16. சில விவரங்கள்

## ஆஸ்திரேலிய வெள்ளையர்

ஆஸ்திரேலிய வெள்ளையர் யாவரும் பிரிட்டனி லிருந்து வந்தவரே யாவர். ஆதலால் அந்நாட்டில் ஆங்கிலமே அரசாங்க மொழியாக இருந்துவரு கின்றது. ஆஸ்திரேலியருள் மூன்றில் இரு பங்கினர் சிட்னி, மெல்பர்ன், பிரிஸ்பேன், அடிலேட், பெர்த், ஹோபர்ட் முதலிய பெரிய நகரங்களிலேயே வாழ் கின்றனர். ஆஸ்திரேலியர் இயற்கைக் காட்சிகளைக் கண்டு இன்புறுவதில் மிக்க விருப்பமுடையவர்; அமைதி பெறவும் ஓய்வு பெறவும் சிலர் தோப்பு களுக்கும், அடர்ந்த புல்வெளிக்கும் செல்வதுண்டு. அவர்கள் தோட்டத்தோடு கூடிய சிறிய வீடுகளில் தனித்தனியே வாழுதலை விரும்புகின்றனர்; தம் வீட்டுச் சுவர்மீது பழுப்புநிறத்தையும், சாக்லேட் நிறத்தையும் பூசுவதில் விருப்பங் கொண்டவர். அம் மக்கள் எப்பொழுதும் மேனுட்டு ஐரோப்பிய வுடையிலேயே காணப்படுவர். ஆடவருள் சிறந்த உடை உடுப்பவர் தொழிலாளரே யாவர். திங்கள் தோறும் அவர்கள் பெறும் முதல்வார வருவாய் உடைகளுக்கே செலவழிக்கப்படுகின்றது. பொது வாக, ஆடவரைவிடப் பெண்டிரே சிறந்த உடை யணிகின்றனர்.

## உணவு

ஆஸ்திரேலிய வெள்ளையர் விருந்துகளிலும் நடனங்களிலும் பெருவிருப்புடையவர்; நன்றுக உண்டு உடுப்பதிலும் கருத்துக் கொண்டவர்; பழங்

களிலும், பலவகை ரொட்டிகளிலும், பிற உணவுப் பொருள்களிலும் தேனைச் சேர்ப்பதில் விருப்பம் உடையவர். தேன் சேர்க்கும் தொழிலை இவர்கள் திறம்பெற நடத்துகின்றனர்; ஆண்டுதோறும் பல் லாயிரம் டன் எடையுள்ள தேனை வெளிநாடுகட்கு அனுப்புகின்றனர். செம்மறியாட்டு இறைச்சியே அவர்களுக்குச் சிறப்பு உணவாகும்.

## நுண் கலைகள்

இசை, நடனம், நாடகம், ஓவியம் முதலிய நுண்கலைகள் ஆஸ்திரேலியாவில் நாளொரு மேனி யும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ச்சிபெற்று வருகின்றன. நகைச்சுவைப் படங்கள் வரைவதில் உலகப் புகழ்பெற்ற டேவிட்லோ, கார்டன் கர்ரி, வில் டைசன் என்பவர் ஆஸ்திரேலியரே யாவர்.

ஆஸ்திரேலியர் நாடகப்பிரியர். ஆஸ்திரேலி யாவில் நாடக அரங்குகள் மிகுதியாக இருக் கின்றன. நாடகக் கலை அங்குப் புதிதாக ஏற்பட்டு வளர்பிறைபோல வளர்ந்து வருகின்றது. ஒரு கோடி ரூபாய் மதிப்புள்ள நாடக அரங்குகள் சிட்னி யிலும், மெல்பர்ன் நகரத்திலும் இருக்கின்றன எனின், ஆஸ்திரேலியரது நாடகக் கலைப்பற்றை என்னென்பது!

அந்நாட்டில் நடனக்கலை ஊக்கத்துடன் வளர்க் கப்படுகிறது. ஆஸ்திரேலிய நடனமகளிர் பல்வேறு நாட்டு நடன வகைகளிலும் பண்பட்டிருக்கின்றனர். மெல்பர்ன் நகர அரங்கம் ஒன்றில், நமது மலையாள நாட்டுக் கதகளி நடனத்தை ஓர் ஆஸ்திரேலிய இள நங்கை நடித்ததைக்கண்டு நான் பெருவியப் படைந்தேன்.

## படக்காட்சி

படக்காட்சி அங்குக் குழந்தைப்பருவத்தில் இருக்கின்றது. ஓராண்டில் மூன்று படங்களுக்கு மேல் பெரும்பாலும் எடுக்கப்படுவதில்லே.

## விளையாட்டுகள்

ஆஸ்திரேலியர் கிரிக்கெட் விளையாட்டில் இணையற்றவர். இதனை அவர்கள் தமக்குரிய சிறப்பு விளையாட்டாகக் கொண்டிருக்கின்றனர். ஆஸ்திரேலியச் செய்தித்தாள்களில் இவ்விளையாட்டைப் பற்றிய கட்டுரைகளும் செய்திகளும் அடிக்கடி வெளிவந்துகொண்டிருக்கும். இவ் விளையாட்டுக்கென ஒவ்வொரு மாநிலத் தலைநகரத்திலும் விளையாடுமிடங்கள் கண்ணைக்கவரும் முறையில் அமைந்துள்ளன.

குதிரைப் **பந்தயத்திலும்** ஆஸ்திரேலியா பெயர்போனது. குதிரைமீது ஏறி ஓட்டும் பயிற்சியை அளிக்கும் பள்ளிகள் பல அங்கு இருக்கின்றன. மெல்பர்ன் நகரத்திலுள்ள குதிரைப்பந்தய வெளி பார்க்கத்தக்கது. டென்னிஸ், ஹாக்கி விளையாட்டுகளிலும் ஆஸ்திரேலியர் ஊக்கம் மிக்கவரே ; **நீச்சுப் போட்டியிலும்** சிறந்த முறையில் பயிற்சி பெற்றுள்ளனர். ஆஸ்திரேலிய மக்களுட் பலர் பொழுதுபோக்குக்காக மீன் பிடிப்பர். ஆற்றில் மீன்பிடிக்க எவ்விதக் கட்டுப்பாடும் அந்நாட்டில் இல்லே. படகோட்டும் விளையாட்டிலும் அவர்கள் தக்க பயிற்சி பெற்றுள்ளனர். கல்லூரி மாணவரும், அலுவலக வேலையாட்களும், தொழிலாளரும் படகோட்டும் விளையாட்டில் பெரும்பங்கு கொள்கின்றனர்.

## அரசாங்க அலுவலர்

நாட்டு ஆட்சி நன்முறையில் நடக்க வேண்டு மாயின், அமைச்சன் முதல் சேவகன் வரையுள்ள அரசாங்க அலுவலர் அனைவரும் கடமையுணர்ச்சி யுடன் செயலாற்றுதல் வேண்டும். இக்கடமை யுணர்ச்சியிற் சிறிது வழுவின், ஆட்சியிற் குறை பாடு தோன்றும். இதனை நன்குணர்ந்தவர் ஆஸ்தி ரேலியர். பொதுவிடங்களில் அமைச்சரும் அரசாங் கச் சேவகரும் ஒருபடித்தாகவே கருதப்படுகின்ற னர். அமைச்சர்கள் பொதுமக்களோடு வரிசையாக நின்றே விளையாட்டிடங்களிலும், பிற பொதுவிடங் களிலும் நுழைவுச்சீட்டுப் பெறுவர். இந்நிலை நமது நாட்டில் என்று வரும்?

## பெண்கள்

ஆஸ்திரேலியப் பெண்கள் அந்நாட்டு ஆட வரைப்போலவே எல்லாத்தொழில்களிலும் ஈடுபடு கின்றனர். அரசாங்கம் அவர்களுக்குத் தனிச் சலுகைகள் காட்டுகின்றது. அதனால் தொழிற்சாலை களில் பெண்கள் தொகை மிகுதியாக இருக்கின்றது. குடும்பப்பெண்கள் தம் குழந்தைகளுக்கு வேண்டும் உடைகளைத் தாங்களே தைக்கின்றனர்; பின்னல் வேலையையும் செய்கின்றனர்; தங்கள் குடும்பத் திற்கு வேண்டும் உணவுப்பொருள்களைத் தயாரிக் கின்றனர்; பெற்றோர் இல்லாத குழந்தைகளையும், துடுக்குத்தனம் மிகுந்த பிள்ளைகளையும் வளர்க்கும் பொறுப்பை ஆஸ்திரேலிய அரசாங்கம் ஏற்றுக் கொண்டுள்ளது. இப்பிள்ளைகளுள் பெண் பிள்ளை களை வளர்க்க நூற்றுக்கணக்கான செவிலித்தாய் மார்கள் அரசாங்கத்தவரால் அமர்த்தப்பட்டுள்ள

னர். தொடக்கநிலைப் பள்ளிகளில் பிள்ளைகளைக் கவனிக்கும் தாதிமார் பலர் பணி செய்கின்றனர்.

பெண்கள் பலவகை விளையாட்டுக்களிலும், நீச்சுப்போட்டிகளிலும் இசை, நடனம், நாடகம் முதலிய கலைகளின் வளர்ச்சியிலும் விருப்புடன் ஈடுபடுகின்றனர். அவர்கள் ஒரு நிமிட நேரத்தையும் வீணாகக்கழிப்பதில்லை என்பது கவனித்து மகிழ்தற் குரியது.

## செய்தித் தாள்கள்

ஏறத்தாழ எண்பது லட்சம் மக்கள் வாழும் ஆஸ்திரேலியாவில் முப்பது நாளிதழ்கள் இருந்து வருகின்றன. இவையன்றி வார இதழ்களும், திங்கள் இதழ்களும் நூற்றுக்கு மேற்பட்டுள்ளன. நாளிதழ்களில் ஒவ்வொரு நாட்டு அரசியற் செய்தி களும், பல தொழிற் செய்திகளும் பிறவும் வெளியா கின்றன. நாளிதழ்களுள் 'சிட்னி மார்னிங் ஹெரால்டு', 'மெல்பர்ன் ஆர்க்ஸ்' என்பன சிறப் பிடம் பெற்றுள்ளன. வார இதழ்களுள் 'ஆஸ்திர லேசியன் போஸ்ட்' என்பது குறிப்பிடத்தக்கது. திங்களிதழ்களுள் 'வாக் அபவுட்' (Walk about), 'தி ஆஸ்திரேலியன் அவுட்லுக்' என்பன குறிக்கத் தக்கவை. இவற்றுள் பல நாடுகளைப் பற்றிய கட் டுரைகளும், சுவை பயக்குஞ் செய்திகளும் திங்கள் தோறும் வெளியாகின்றன.

## வானொலி

ஆஸ்திரேலியாவில் அரசாங்கம் முப்பது வானொலி நிலையங்களை நடத்திவருகின்றது. தனிப் பட்ட வணிகர் நூற்றுக்கு மேற்பட்ட வானொலி நிலை

யங்களை நடத்துகின்றனர். அயல்நாடுகளுக்கு ஒலி பரப்புதல் அரசாங்கத்தார் கடமையாகும். பல வகைச்செய்திகள், அரசாங்க அறிக்கைகள் இவற்றை ஆங்கிலத்திலும், வெளிநாடுகளுக்கு உரிய நிகழ்ச்சிகளைப் பல மொழிகளிலும் இவை ஒலிபரப்பு கின்றன. வணிகர் நடத்துபவை உள்நாட்டுக்கே ஒலிபரப்புகின்றன. விளம்பரங்களை ஒலிபரப்புதல் இவற்றின்சிறப்பு வேலையாகும்.

பாராளு மன்றம் நியமிக்கும் ஒரு குழுவினரே, இவ்விரு நிலையங்களும் ஒலிபரப்பவேண்டுவன வற்றை முடிவு செய்கின்றனர். இக்குழுவினர் இசை வின்றி எந்த வானொலி நிலையமும் ஒரு செய்தியை ஒலிபரப்புதல் முடியாது.

ஆஸ்திரேலியப் பாராளு மன்றத்தின் நிகழ்ச்சி கள் மிகச் சிறந்த முறையில், பொதுமக்களுக்கு அரசியல் அறிவு ஏற்படும் வகையில், ஒலிபரப்பப் படுகின்றன. இம்முறை நமது நாட்டில் கையாளப் படுமாயின், கல்வி யறிவற்றவரே பெரும்பாலராக வுள்ள நமது நாட்டில் அரசியல் அறிவு நன்கு பரவ வழி உண்டாகும் அல்லவா ?

## வானொலி வழித் தேர்தல் பிரசாரம்

தேர்தலில் நிற்பவர் வீடு வீடாகச் சென்றோ, நமது நாட்டில் நடப்பது போலத் தெருக்களில் கூட்டம் நடத்தியோ, தம் கட்சிக் கொள்கைகளைப் பிரசாரம் செய்வதில்லை; அரசாங்க வானொலி நிலையங் களின் வாயிலாகவே பிரசாரம் செய்கின்றனர். தேர் தலில் நிற்கும் ஒவ்வொரு கட்சியினரும் நாள் தோறும் குறிப்பிட்ட நேரத்தில் வானொலி நிலையத் தில் பேசவிடப்படுகின்றனர். இச்சிறந்த முறையால் தேர்தல் பிரசாரச் செலவு சிறிதும் ஏற்படுவதில்லை.

வறுமையின் பிறப்பிடமாகவுள்ள நமது நாட்டில் இச்சீரிய முறையைக் கையாள்வது ஏற்றதன்றே? ஆஸ்திரேலியாவில் கட்டாய வாக்குப் பதிவு உண்டு. ஒவ்வொரு குடிமகனும் தன் வாக்கைப் பதிவு செய்ய வேண்டும் என்பது சட்டம்; தவறினல் இரண்டு பவுன் தண்டம் கட்டுதல் வேண்டும். இந்நிலை ஏற்பட்டுள்ளதால், ஒவ்வொருவரும் அரசியல் கட்சிகளைப் பற்றிய அறிவையும், தேர்தலுக்கு நிற்பவர் தகுதிகளையும் ஆராய வசதி ஏற்பட்டுள்ளது. இம்முறை நமது நாட்டில் இல்லை அல்லவா?

## அமைதியான வாழ்க்கை

இன்றைய ஆஸ்திரேலியாவில் வெள்ளையர், ஏறத்தாழ 77 லட்சம் பேர் இருக்கின்றனர்; சீனர் பதினையாயிரவர் இருக்கின்றனர்; மற்றவர் எழுபத்தையாயிரவர். இவர் அனைவரும் இங்கு ஒற்றுமையாகவே வாழ்கின்றனர். அரசாங்கம் அனைவரையும் ஒரே முறையில் நடத்தி வருகின்றது. பல நாட்டு மாணவர்களும் இங்குக் கல்வி கற்கின்றனர். இத்தகைய நல்ல உறவு உண்மையால், வெள்ளையர் அல்லாத ஆஸ்திரேலியர் ஆஸ்திரேலியாவைத் தம் தாய் நாடெனக் கருதி, அதன் முன்னேற்றத்திற்கு உழைத்து வருகின்றனர்.

---